உ

சிவமயம்.

ஸ்ரீசற்குருப்யோநமஃ.

# கோயிலூர்ப்புராணமென்னுஞ்
# சமிவனக்ஷேத்திரமான்மியவசனம்.



இது

திருவிடைமருதூர்

ப்ரம்மஸ்ரீ

பிச்சுசாஸ்திரிய சுவாமிகளால்

வடமொழி ஸ்காந்தபுராணத்தினின்று

மொழிபெயர்க்கப்பட்டு,

காரைக்குடி மேலமடாலயம்

சேவு. பழ. பழநியப்பய்யா அவர்களால்

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விகாரி௵ கார்த்திகை௴.

இதன்விலை ரூபா-அரை.

உ

சிவமயம்.

# ஸ்ரீகோயிலூர்ப்புராணம்,



## வன்னிவிநாயகர் துதி.

சீர்பூத்தமெய்யறிவின்புருவெனற்கோர்குறியீடுதெரித்தலேய்ப்பக்
கார்பூத்தவிருகவுருத்தெய்வவுருப்பூதவுருக்கலப்பத்தோன்றித்
தார்பூத்தநசையாலுந்தாங்கொடுத்தவரத்தாலுந்தணவாதென்று
மேர்பூத்தசமிநிழல்வாழ்வன்னிவிநாயகர்மலர்த்தாளிறைஞ்சிவாழ்வாம்.

## கோற்றவாளீசர் துதி.

மாமேவுகோகனகமரும்பன்மலருதல்குவிதன்மருவத்தோயாத்
தாமேவுபரிதியெனத்தன்முனர்முத்தொழினடப்பத்தோயாதான்றோர்
பாமேவுமிடங்கொள்வன்னியிரண்டலமூன்றெனவமரர்பரவமேவுங்
கோமேவுவன்னிவனக்கொற்றவாளீசர்பதங்குறித்துவாழ்வாம்.

## நெல்லைநாயகி துதி.

ஓரறிவுமுதலாவையறிவுயிர்ப்பைங்கூழ்தழையவொருங்குகாக்கும்
பேரறிவுவெளிப்படுப்பானூறுணர்ச்சியுயிர்ப்பயிர்முன்பிறங்கக்காத்துக்
காரறிவுதபக்களைந்துகாரணநோக்குறும்பெரியோர்கட்காநந்த
நேரறிவுமயமானநெல்லைநாயகிமலர்த்தாணினைந்துவாழ்வாம்.

## கைலாயநாதர் துதி.

தன்னிகரிறலப்பெருமைதனையுணர்ந்தோமாதவர்தஞ்சங்கநாளு
மன்னிவசிப்பதுதெரிந்தோகழனிநகர்கைலையெனவயங்கநேர்ந்தோ
பொன்னிநதிக்கரைமுதற்பற்பலவிருக்கமதுக்குடிஞைப்பொலிதீரத்து
வன்னிவனத்திடைப்புகுந்தகைலாயநாதர்பதம்வணங்கிவாழ்வாம்.

## நித்தியகல்யாணி துதி.

சத்தியநிட்களநிருவிகாரநிரஞ்சனபரசைதன்னியத்தை
மெத்தியநன்மலர்மணத்திற்பிரியாமையுருவிடத்தும்விளங்கக்காட்டிப்
பொத்தியபேரவிச்சைகெடுத்தெவ்வுயிர்க்குஞ்சுவானுபவப்பொலிவுநல்கு
நித்தியகல்யாணபராபரையிருபொற்றாட்கமலநினைந்துவாழ்வாம்.

### வன்னிவிநாயகர் துதி.

அடைபவர்கடவிர்கோசங்கரங்காட்டவதற்கமைசாதனந்தோள்காட்ட
வுடைதருகீழவத்தைவிழிகாட்டமேலவத்தைமதவூற்றங்காட்ட
நடைகெழுமற்றவர்புரியும்பாவனையைமருப்பெடுத்துநன்குகாட்டத் [ம்.
தடைதவிர்பேரருள்கொழிக்கும்வன்னிவிநாயகர்மலர்த்தாள்சார்ந்துவாழ்வா

### அகத்தியமுனிவர் துதி.

துன்னுபல்கருமஞ்சித்தசுத்தியாமாறுசெய்து
மன்னுமற்றதுபெருநசைமினிவந்திரப்ப
முன்னுதண்கழனிநாதன்முழுதருள்பெற்றுஞானங்
கொன்னுமின்புறநவின்றகுறுமுனிக்கன்புசெய்வாம்.

### ஆலயப்பணியோர்கள் துதி

கொற்றவாளீசற்காலயவிமானகோபுரமண்டபமாதி
முற்றவார்வத்திற்புரிந்தவர்புரிவோர்முனிவரும்விழாச்சிறப்பெடுப்போர்
செற்றபல்லுபசாரங்களும்பரிவாற்செய்பவர்பிறவிரும்புநரு
முற்றவரவர்கள்யாவராயினும்யாமுண்மையிற்போற்றுதுமுவந்தே.

### ஸ்ரீமுத்திராமலிங்கதேசிகர் துதி.

மேயபெருங்கழனிநகர்கோயிலூரெனும்பேர்மேவவிறையாலயத்தைவிரித்தவருட்பெரியோன், பாயபுனறிரண்டாலியாயதெனச்சுத்தப்பரப்பிரமமிவ்வுருக்கொண்டுற்றதெனும்புரண, ஞயபுகழ்வேதாந்தசிரவணஞ்செய்துலகிலளவிலர்சைதன்னியமாகப்புரிந்தவறவோன், தூயமுத்திராமலிங்கதேசிகனென்றுரைக்குஞ்சோதிலிங்கசொரூபனெனுஞ்சோதியையேத்தெடுப்பாம்.

### ஸ்ரீதுறவுசுவாமிகள் துதி.

துறவொழுக்கமனைத்துமொருவடிவுகொண்டாலன்னதூயவன்றன்மயமாகயாவையுங்கண்டிருப்போன், மறவொழுக்கங்கடிந்துயிர்கள்சுவானுபவமருவவயங்கியவேதாந்தசிரவணமேற்றும்வலியோ, னறவொழுக்கந்தலையெடுப்பக்காரணங்கண்டுவெப்போ னடங்குமிடமாகியசிதாகாசப்பிரிய, னுறவொழுக்கம்வளர்த்தவருணாசலதேசிகனென்றுரைத்திடுநந்தீசனெனுமொருவனை வாழ்த்திடுவோம்.

### சிதம்பரதேசிகன் துதி.

மேலாயதுறவினுக்கோர்துணையாகியுள்ளான்விரிந்தபலபுவனமுங்கான்றிடுசோற்றிற்கண்டோ, ஞலாயமறைமுடியின்பொருள்விளங்கவெடுத்துநலமாணவகர்க்கருளித்தன்மயமாக்கிடுவோன், பாலாயசிவதருமம்பற்றறப்பாலிப்போன்பரப்பிரமசுவானுபூதியிற்சிறந்தமேலோ, னூலாயயாவுமுணர்ந்தவர்மனுவினெடுத்துநுவலுமொருசிதம்பரதேசிகனடியைப்பணிவாம்.

24-3.

## ஆக்கியோன்பெயர்.

தூயமுத்திராமலிங்கதேசிகன்பேரருள்பெற்றோன்சுகுணஞான
மேயவருணாசலதேசிகனவன்பாலருள்பெற்றுவிளக்கஞ்சான்ற
பாயபுகழ்ச்சிதம்பரதேசிகன்கேட்கவுயர்கழனிப்பதிப்புராணம்
வாயமையப்புனைந்துரைத்தான்மீனாட்சிசுந்தரநாவலன்மிக்கோனே.

## பலன்.

இன்னபுராணத்தையினிதெழுதுவோரெழுதுவிப்போர்
பன்னருஞ்சொற்பொருளுரைப்போருரைப்பவர்தம்பாற்கேட்போ
ரென்னருமெண்ணரும்போகமிப்புவியினுகர்ந்தீற்றி
னன்னரொளிமிகுபிரமஞானியராயின்புறுவார்.

## இதுவுமது.

பொருள்பலவுமினிதமையிப்புராணமமர்கிருகத்து
வெருள்பலசெய்பூதபிசாசாதிகளுமேவாவா
லிருள்பலசெய்வறுமையறவிந்திரைநீங்காதமர்வா
ளருள்பலபுத்திரர்பொலியவமைந்துவிளங்குவர்மாதோ.

## இப்புராணத்திற்கதிகாரிகள்.

பிரியமிகுங்கொற்றவாளீசர்பெருஞ்சரித்திரமா
யரியபுகழ்வேதாந்தமுழுவதுநன்கமைதலினு
லுரியவதிகாரிகளாயுள்ளவரிப்புராணத்தைத்
தெரியவமைகுருமுகமாத்தெளிதரிற்றன்னியராவார்.

திகழ்தருசின்மயரூபசிதம்பரதேசிகன்மொழிய
விகழ்தருதலிலாதவன்சொலேற்றபெரும்புண்ணியத்தாற்
புகழ்தருமிப்புராணத்தைப்பாடினேன்புன்மையெலா
மகழ்தருபேரறமுதலாயாவுமடைந்தனன்யானும்.

## வாழ்த்து.

இலங்குபுகழ் வன்னிவனம் வாழ்கவொளிர்
கொற்றவா ளீசர் வாழ்க
கலங்குதறீர்த் தெனையாண்ட நெல்லைநா
யகிபெரிய கருணை வாழ்க
மலங்குதலி லத்தலத்து மன்னிவளர்
மாதவர்கள் வாழ்க வாழ்க
நலங்குலவு மணிமன்று ணடநவில
வெடுத்தபொற்றா ளும் வாழ்க.

துதி முற்றும்.

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| ௫ | ௨ | பாணஞ் | பானஞ் |
| ,, | ௧௯ | சேகராதி | சேகரராதி |
| ௬ | ௧ | கங்களையும் | ங்களையும் |
| ௮ | ௯ | பிரகச்சாபல | பிரகச்சாபால |
| ௧0 | ௨ | கேவல | கேவலங் |
| ௧௬ | ௩௨ | வித்தியாத | வித்தியாதர |
| ௧௬ | ௧௫ | ஒர் | ஓர் |
| ௧௮ | ௩௧ | பஞ்சாமிர்த் | பஞ்சாமிர்தத் |
| ௧௯ | ௨௮ | வீரபாண்டி | வீரபாண்டிய |
| ௨0 | ௧௬ | மாயிர் | மயிர் |
| ,, | ௧௭ | நன்றாப் | நன்றாகப் |
| ,, | ௨௮ | ப்'வ | ப்'வர |
| ௨௧ | ௧ | நாமமுஞ் | நாமமும் |
| ௨௨ | ௩௨ | யதாரு | யாதொரு |
| ௨௩ | ௨௭ | தை ஒன்றே | ஒன்றே |
| ௨௪ | ௩ | பிரமதேரை | பிரமதேவரை |
| ,, | ௨௫ | சரீரத்திரைய | சரீரத்திரய |
| ௨௬ | ௩0 | பிராரர் | பிரார |
| ௪0 | ௮ | கொடிரு | கொண்டிரு |
| ௪௧ | ௩௨ | பொற்றி | போற்றி |
| ௪௨ | ௩0 | மதுபபிரியாதி | மதுப்பிரியராதி |

சிவமயம்.

கணேசாயநமஃ.

# சமிவனக்ஷேத்திரமான்மிய வசனம்.



## பாயிரம்.

சகல விக்கின நிவர்த்தகராயிருக்கின்ற விநாயக மூர்த்தியையும், ஞான குருவான சண்முக மூர்த்தியையும், சத்திய க்ஞானனந்த பரிபூரண பரமாத்வைதராய் நித்திய சுத்த புத்த முத்த சுபாவராயிருக்கின்ற திரிபுவனேசுவரரையும், பரப்பிரம வித்தியா சொரூபியாய்ப் பரமசிவாபின்னையாய்ப் பக்தாபீஷ்ட பலத்தைக் கொடுப்பவளாய்ச் சருவசத்தி சொரூபியாய்ச் சகல ஜகந்நாயகியாய்ச் சருவ ஜகந் மாதாவாயிருக்கின்ற திரிபுவனேசுவரியையும், இவர்களின் அடியார்களையும் திரிவித கரணங்களாலும் வணங்குவாம்.

இனி, ஆறு சங்கிதையை யுடைத்தாய் இலட்சஞ் சுலோகமாயிருக்கின்ற ஸ்காந்தபுராணத்தில் முதலாவதான சனற்குமாரசங்கிதையில் க்ஷேத்திர கண்டத்தில் இருக்கின்ற வன்னிவன மான்மியத்தைச் சூதமகாரிஷி நைமிசாரணியவாசிகளான ரிஷிகளுக்கு அருளிச்செய்த பிரகாரம் யான் என் புத்திக்குத் தோன்றினமட்டுந் தமிழ்மொழியாற் சொல்லுகின்றேன்.

பாயிர முற்றிற்று.



## முதலாவது
## சௌனகாதிரிஷிகள் சூதமகாமுனிவரை நோக்கி, வன்னிவனக்ஷேத்திரமான்மியத்தை வினவும் அத்தியாயம்.

பூர்வம் ஒருகாலத்தில் வேதவித்துக்களான ரிஷிகளெல்லோரும் நைமிசாரணியத்திற் பன்னிரண்டு வருஷத்திற் செய்து முடிக்கத்தக்கதான யாகத்தை ஆரம்பிக்கிறதற்காக ஒருமித்துக் கூடினார்கள். (க)

அந்த ரிஷிகள் யாரெனில்.—சௌனகர், வசிட்டர், வாமதேவர், விசுவா மித்திரர், சாதாதபர், கௌதமர், காசிபர், கார்க்கியர், பிருகு, அத்திரி, மகாதபர், போதாயனர், சத்தியாஷாடர், மௌத்கலர், ஆபஸ்தம்பர், ஆணிமாண்டவியர், யாக்கியவர்க்கர், காத்தியாயனர், சதானந்தர், புலத்தியர், ககோளர், பாஷ்களி, வீதிகோத்திரர், சாகல்லியர், சாலிகோத்திரி, தூம்ரர், கௌஷீதகி முதலான அநேக ரிஷிகளாம். இவர்கள் லோகானுக்கிரக நிமித்தமாய் எக்ஞத்திற்குத் தீக்ஷிதராகவும் அதற்குச் சாத காசிரியராகவும் இருந்துகொண்டு, தீட்சை முதலான நியமத்துடன் முன்சொன்ன யாகத்தைச் செய்யத்தொடங்கினார்கள். (உ)

அந்தச் சமயத்திற் பரமசிவ பக்தோத்தமராய், இந்திரிய நிக்கிரக முள்ளவராய், பதினெண் புராணமும் அறிந்தவராய், சர்வசாஸ்திர சமர்த்தராய், சக உற்பத்தி திதி லயங்களுக்குக் காரணமாய்ச் சத்தியக்ஞானனந்த சொரூபமாய் இருக்கின்ற பிரத்தியக் அபின்னமானபரசிவமே தானென்று அனுபவிக்கின்றவராய் இருக்கின்ற சூதமகாமுனியானவர், தன் சீடர்கள், தன் சீடருக்குச் சீடர்கள் இவர்களுடனே அந்த எக்ஞசாலைக்கு எழுந்தருளி வந்தனர். அந்தச் சூதமகாமுனிவரைச் சவுனகாதியரான சகல முனிவர்களும் நோக்கி எதிர்கொண்டழைத்து வந்து, ஆசன முதலானவை கொடுத்து, சாஸ்திர விதிப்படி அர்க்கிய பாத்திய ஆசமனாதிகள் செய்வித்து, மிகுந்த அன்புடன் பூசித்தார்கள். (௩)

பின்பு அந்தச் சூதமகாமுனியானவர் சௌனகாதி ரிஷிகள் செய்த உபசாரத்தைப் பெற்று, சிரம பரிகாரத்தோடு சந்தோஷ

சித்தராயிருக்கும் அளவில், அந்த முனிவர்கள் அவரை நோக்கி வினவினர்கள். (௯)

அஃதேதென்னில்.—சர்வக்ஞராய்ப் பரமசிவபத்தியே சரணமாய் அடைந்திருக்கின்ற சூதமகா ரிஷியைப் பார்த்து, "ஏ சுவாமின்! தங்களுடைய முகாரவிந்தத்தினின்றும் பெருகாநின்ற புராண கதையாகிய அமிர்தத்தை யாங்கள் பானம் பண்ணியும் அதில் எவ்வளவுந் திருப்தி யுண்டாகவில்லை. (௧௦)

இமோத்பருவதந் தொடங்கிச் சேதுபரியந்தம் மத்தியிலுள்ள புண்ணிய தீர்த்தங்கள் புண்ணிய ஸ்தலங்கள் யாவும் சருவக்ஞராயிருக்கின்ற உம்மால் எங்களுக்கு முன் உபதேசிக்கப்பட்டிருக்கின்றனவே. (௧௧)

அவைகளினுங் காவேரி தீரத்தில் சருவ சித்தியுங் கொடுப்பதான மாயூர முதலான புண்ணிய சிவ க்ஷேத்திரங்கள் இருக்கின்றனவென்று விசேடமாகத் தங்களாற் சொல்லப்பட்டதே. (௧௨)

அவைகளுக்குள் திருவானைக்கா என்கின்ற சிவக்ஷேத்திரத்திற்குத் தக்ஷிண பாகத்தில் அஞ்சு யோசனை தூரத்திலிருக்கின்றதாயும், சத்தியபுஷ்கரணி தீர்த்தத்தோடே கூடினதாயுந் திருமெய்யமென்று விளங்காநின்றதாயு மிருக்கின்ற சத்தியகிரி க்ஷேத்திரத்திற்குத் தக்ஷிண திக்கில் ஒரு யோசனை தூரத்திலிருக்கின்றதாயும், கண்ட தேவியென்று விளங்காநின்ற சொர்ண வருஷேசுவர க்ஷேத்திரத்திற்கு உத்தர திக்கில் அரை யோசனை தூரத்திலிருக்கின்றதாயும், திருப்பெருந் துறைக்கு மேற்குத் திக்கில் ஒன்றரை யோசனை தூரத்தில் இருக்கின்றதாயும், திருப்புத்தூருக்குக் கிழக்குத் திக்கில் முக்கால் யோசனை தூரத்திலிருக்கின்றதாயுங் கழனிவாசல் என்று விளங்காநின்றதும் சாலிவாடி என்றும் வன்னிவனமென்றும் ஸ்ரீவல்லப மென்றும் பிரசித்தமானதுமான ஒரு சிவ க்ஷேத்திர முண்டென்று தங்களால் முன் சொல்லப்பட்டது. இப்போது அந்தச் சிவக்ஷேத்திர மகிமையைக் கேட்பதற்கு எங்களுக்கு மிகுந்த அன்புண்டாயிருப்பதால், அதைத் தாங்கள் தயையினால் அனுக்கிரகம் பண்ணவேண்டும்" என்று சௌனகாதி முனிவர்கள் வினவினர்கள். (௧௩)

இவ்விதம் வினவிய ரிஷிகள் வசனத்தைச் சூதமா முனிவர் கேட்டு, நிஷ்கள நிஷ்கிரிய நிருவிகார நிரஞ்சன நிர்மல நிஷ்பிரப

ஞ்ச நிராகார நிர்த்தொந்த நித்திய சுத்த புத்த முத்த சச்சிதான ந்த பரிபூரண பரமாத்துவித சொரூபராய்ச் சர்வஞ்ஞத்துவ சர்வ சத்தித்துவ சர்வேசுரத்துவாதியான அனந்த கலியாண குணங்கள் நிறைந்தவராய்ச் சந்திர சூடராய்ச் சடா தாரியாய்க் கங்காதரராய்த் திரிநேத்திரராய் நீலகண்டராய்ச் சதுர்ப்புஜராய் மான்மழு திரிசூல முதலியவைகளைத் தரிப்பவராய்ப் பார்வதி சமேதரா யிருக்கின்ற திவ்விய மங்கள மூர்த்தியான பரமசிவனை ஒரு முகூர்த்த பரிய ந்தந் தியானித்து, ஆனந்தபாஷ்ப புளகாங்கிதராய் மிகுந்த சந்தோ ஷத்துடனே வன்னிவன மகாத்மியத்தைச் சொல்லத் தொட ங்கினர். (கஎ)

ஏ சௌனகாதி ரிஷிகளே! இன்று உங்களால் இந்தச் சிவ க்ஷேத்திர மகிமையின் நினைப்பை உண்டுபண்ணப்பட்டபடியால் நீங்களும் நானும் மிகவுந் தன்னியராயினேம். (கஅ)

இந்த வன்னிவன க்ஷேத்திரத்தில் சர்வபாவ நிவர்த்தகராய்த் தர்மார்த்த காம மோட்சத்தைக் கொடுப்பவராயிருக்கின்ற சாம்ப பரமசிவன் எப்போதும் விசேடமாய் விளங்கிப் பக்தர்களுக்குச் சர்வாபீஷ்டத்தையும் அனுக்கிரகஞ் செய்துகொண் டிருக்கின்ற படியால், இந்தச் சிவ க்ஷேத்திரத்தை நினைத்த மாத்திரத்தாற் சகல சீவருக்கும் சமஸ்த பாவமும் நீங்கிச் சகல புருடார்த்தமுங் கிடைக்கும். (ககூ)

அகண்ட சோதிர்மய லிங்கமாய் விளங்கிய யாதொரு பரம சிவனுடைய திருவடியையும் முடியையுங் காணும்பொருட்டு அரி அயன் இருவரும் வராகரூபமாயும் அன்னரூபமாயும் பாதாளத் திலும் ஆகாசத்திலும் மிக முயன்று தேடியபோதும் அந்தத் திரு வடியையும் முடியையுங் காணர்களோ அப்படிப்பட்ட அகண்ட சிதாகாச ரூபராய்ச் சர்வக்ஞத்துவாதி குணமுள்ளவராய்ச் சந்திர சூடராய் விளங்கிய ஸ்ரீ பரம சிவனுடைய நிக ரில்லாத அனந்த மகிமையை இச்சகத்தில் யார் வர்ணிக்க வல்லோர்? (உ०)

திருப்பாற் கடலில் மந்தரம் மத்தாகவும், வாசுகி நாணகவுஞ் செய்துகொண்டு, சகல சுராசுரர்களும் அமிர்த மதனஞ் செய்யும் போது வாசுகி முகத்தினின்றும் மகா கோரமான காளகூட விஷ முண்டாகிச் சகத்தையெல்லாம் வியாபித்துத் தகிக்கும்போது பிரமா முதலான சகல தேவரும் நிச்சேட்டராயிருக்க, அச்சமய

த்திற் பரமதயாளுவான யாதொரு பரமசிவன் அவ்விடத்திற் றோன்றி, அந்த விஷத்தை யமுதம்போலப் பானஞ் செய்து, எல்லாச் சகத்தையும் இரக்ஷித்தாரோ அந்தப் பரமசிவனுடைய நிரதிசய மகிமையை யார் வர்ணிக்க வல்லோர்? ஆதலால், இம்மகிமையைச் சொல்லுவதினும் மூகத்தன்மையை அடைவதே உத்தமம். (உக)

ஆயினும் அன்பினுல் அந்தப் பரமசிவனுடைய மகிமையைக் கிஞ்சித் மாத்திரம் எனக்குத் தோன்றியமட்டுஞ் சொல்லுகிறேன். இதை நீங்கள் அனைவரும் ஏகாக்கிர மனதாய் மிகுந்த சிரத்தையுடன் கேளுங்கள். (உஉ)

பூமி இரதமாகவும், சந்திர சூரியர் சக்கரங்களாகவும், வேதங்களே பரிகளாகவும், பிரமாவே சாரதியாகவும். மகா மேருவே வில்லாகவும், வாசுகியே நாணுகவும், விஷ்ணுவே பாணமாகவும் இப்படி லீலையாக அங்கீகரித்துக்கொண்டு, யாதொரு பரமசிவன் புன்சிரிப்புக் கொண்டே திரிபுர தகனஞ் செய்தாரோ, அப்படிப்பட்ட சர்வ வல்லபமுள்ள திரிபுவனேசுவரர் எப்போதும் எனது இருதயத்தில் விளங்கக் கடவர். (உ௩)

இப்படிச் சர்வ சத்திமானுய்ச் சர்வாத்மகராய்த் திரிவித பரிச்சேத சூனியராய்ச் சந்திரசேகராதி சின்னமுள்ள திவ்விய மங்கள மூர்த்திதரராய்ப் பகவானுயும் திருநெல்லை நாயகிக்கு நாதனுயுமிருக்கின்ற ஸ்ரீ இராசகட்க பரமேசுவரரைத் தியானித்துக்கொண்டு, சமிவன மான்மியத்தைச் சூத மகா முனிவர் சொல்லத் தொடங்கினர். (உச)

இப்படி ஸ்காந்த புராணத்தில் க்ஷேத்திர கண்டத்திலுள்ள
சமிவன மான்மியத்தின் முதலாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

## இரண்டாவது
## க்ஷேத்திரமகிமை யுரைக்கும் அத்தியாயம்.

---

சூதமகாரிஷி சொல்லுகிறுர்.—

சமிவன மென்கிற சிவக்ஷேத்திரமானது க்ஷேத்திரங்களுக்கெல்லாம் உத்தமமாயும், சீவர்களுடைய சமஸ்த பஞ்சமாபாதக

ங்களையும் போக்குவிப்பதாயும் மதுபுட்கரணியென்கின்ற தீர்த்த த்தோடே கூடினதாயும். (க)

நானுவித மிருகங்கள் பட்சிகளோடே கூடினதாயும், நானு வித விருக்ஷங்களாலும் நானுவிதமான தாமரை செங்கழுநீர் முத லான புட்பங்களுடைத்தான வாவிகளாலும் அலங்கரிக்கப்பட்ட தாயும், மயில்களுடைய மூச்சுக் காற்றினுற் பசி தீர்ந்து திருப்தி யடைந்த சர்ப்பங்களை யுடையதாயும், புலிக்குட்டிகளா லூட்டப் பட்ட மடிகளை யுடைத்தான பசுக்களால் வியாபிக்கப்பட்டதா யும், சிவ பக்தி பரரான வாலகில்லியரென்கின்ற ரிஷிகளாலும், சூரியாக்கினிகளுக்குச் சமமான தேஜஸை யுடைய சந்நியாசிக ளாலுஞ் சேவிக்கப்பட்டதாயும், வேத வித்துக்களான அந்தணர் களுடைய வேத கோஷத்தை யுடையதாயும். (ரு)

சீவர்களுக்குத் தபசை யாரம்பித்த மாத்திரத்தினுலேதானே சகல சித்தியுங் கொடுப்பதாயும், சந்திர சூடராயிருக்கின்ற சாட் சாத் பரமசிவனுக்குத் தக்ஷிண கைலாசம்போலே சந்தோஷ ஏது வாயும் விளங்காநிற்கும். (சா)

சிவாராதனை பண்ணுதவர்களாயும் யாகதானுதி புண்ணிய கர் மங்கள் செய்யாதவர்களாயும் இருக்கின்ற சனங்களுக்கு இந்த க்ஷேத்திரம் ஒருகாலத்தும் அடையக் கிட்டாது. இந்தச் சமிவன க்ஷேத்திரத்துக்குச் சாலிவாடி யென்றும் ஸ்ரீவல்லப மென்றும் பிரசித்தமான நாமங்களுண்டு. (எ)

அனேக ஜன்மத்திற் செய்த புண்ணிய கர்ம பரிபாகத்தினுல் இந்தச் சமிவன க்ஷேத்திர நாயகரான திரிபுவனேசுவரரை எவர்கள் மிகுந்த பக்தியுடனே சேவிக்கிறுர்களோ, அவர்களுக்கு வேதம் யாகம் தானம் தபசு முதலான சத் கர்மங்கள் ஒன்றும் வேண்டிய தில்லை. இந்தச் சச்சிதானந்த பரிபூரணரான திரிபுவனேசுவரரை ஒருகாலாகிலும் எந்த முமுட்சுக்கள் அன்புடனே உண்மையாகத் தரிசனம் பண்ணுகிறுர்களோ, அவர்கள் அந்தத் தரிசன மாத்திர த்தாற் சீவன் முத்தராவார்கள். (கூ)

இந்தத் திரிபுவனேசுவரருக்கு இராசகட்கபரமேசுவரரென்று நாம முண்டு. இந்த க்ஷேத்திரத்திற் சாம்ப மூர்த்தியான இந்த இராசகட்கபரமேசுவரரை யாதொருவர் இரண்டு நேத்திரத்தினுற் றரிசிக்கிறுர்களோ, அவர்கள் இந்திர லோகத்தில் ஆயிரங் கண்க

ளுடைய தேவேந்திரனுக விருந்து, அரம்பாதி அப்ஸர மாத ருடைய நிர்த்தனத்தைப் பார்த்துக் களிப்படைவார்கள். (௧௦)

இந்தப் பரமசிவனை யாதொருவ ராதரவோடே ஒரு முகத்தால் தோத்திரம் பண்ணுகிறார்களோ, அவர்கள் சத்திய லோகத்தில் நான்கு முகத்தை யுடைத்தாகிப் பிரம பட்டத்தை யடைந்து விளங்குவார்கள். (௧௧)

இந்த க்ஷேத்திரத்தில் திரிபுவனேசுவரருடைய சந்நிதானத்தில் ஆமலகமாத்திரமாகிலும் அன்னத்தை அந்தணராதியர்களுக்கு ஆதரவுடனே கொடுப்பவர்கள் சொர்க்காதி லோகத்திற் புதிதான அமிர்தத்தைப் பானம் பண்ணுவார்கள். இந்த க்ஷேத்திரத்தில் சாலிவாடீசுவரி நாயகரான திரிபுவனேசுவரருடைய சந்நிதானத்தில் மறையோருக்குத் தமக்குச் சத்தி யுள்ளமட்டுஞ் சிரத்தையுடன் சுவர்ண தானம் பண்ணினவர்கள் குபேரனைவிட அதிகமானசெல்வத்தை அடைவார்கள். இந்தத் தலத்தில் யாதொருவர் மரணத்தை யடைகிறார்களோ, அவர்கள் அர்த்தசந்திர சடாதாரியாய்க் கங்காதரராய்த் திரிநேத்திரராய்க் காளகண்டராய்ச் சதுர்ப்புஜராய் மான் மழு முதலானவற்றைத் தரித்திருக்கின்ற பரமசிவனுடைய சாரூப்பியத்தை யடைவார்கள். இந்த ஸ்தலத்தில் சிவராத்திரி தினத்தில் இரண்டு கண்களும்விழித்துக்கொண்டு பக்தியுடன் எவர்கள் சாக்கிரதையா யிருக்கிறார்களோ, அவர்களுக்கு மூன்று நேத்திரத்தையுடைய பரமசிவ சாரூப்பியங் கிடைக்கும். யாதொருவர் இந்த ஸ்தலத்தில் ஒரு நிமிடமாத்திரமாகிலும் வாசஞ் செய்வார்களோ அவர்கள் தேவலோகத்திற் சுந்தரமான தேவசரீரத்தை அடைந்து அரம்பாதி சம்போகத்தையும் அடைவார்கள். யாதொருவர் மிகுந்த பக்தியுடன் நிர்மலமான விபூதியால் சர்வாங்கத்திலும் உத்தூளனம் பண்ணித் திரிபுண்டரந் தரித்துக் கண்டஞ் சிரம் கரம் முதலான அவயவங்களில் உருத்திராக்க மாலைகளை விதிப்படி தரித்துப் பஞ்சாட்சரம் ஜபித்துத் திரிபுவனேச மகா லிங்கத்தை நியமமாக உபாசிக்கிறார்களோ, அவர்கள் இகத்திற் சகல போகமும் புசித்து, அந்தத்திற் சிவசாயுச்சியத்தை யடைவார்கள். விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டுசெய்த கன்மங்களே தந்தம் பலத்தைக் கொடுக்குமேயன்றி, அவைகளைத் தரியாமற் செய்த கருமம் யாதொரு பலத்தையுங் கொடுக்க மாட்டாது. ஆதலால் விபூதி உருத்திராக்கந் தரித்துக்

கொண்டவர்களே காண்டத் திரயத்திலும் அதிகாரி யாவரே தவிர, விபூதி உருத்திராக்கம் தரியாதவர்கள் அதிகாரிகள் ஆகார்கள். ஆகையால் முமுட்சுவானோர் இந்தச் சமிவன க்ஷேத்திரத்தில் மிகுந்த அன்புடனே விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு புவனேசுவரரை நியமமா யுபாசித்து ஞானப்பியாசஞ் செய்வார்களாகில் அவர்கள் சீவன் முத்தியை யடைந்து பின்பு விதேக முத்தியையும் அடைவார்கள். இப்படி விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு பரம சிவ உபாசனை செய்பவர்களுக்கே முத்திசித்திக்குமென்று பிரகத்ஜாபால உபநிஷத்தும், காலாக்கினி உருத்திர உபநிஷத்தும், அதர்வசிரோபநிஷத்தும் மற்றும் அனேக உபநிஷத்துகளும் கோஷிக்கின்றன. (கசா)

இப்படி ஸ்காந்த புராணத்தில் க்ஷேத்திர கண்டத்திலுள்ள
சமிவன மான்மியத்தின் இரண்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் உ-க்குச் சுலோகம் சo.

---

## மூன்றாவது
## அகஸ்தியர் ஜைமினிக்கு வீரபாண்டியன் சரித்திர மூரைத்த அத்தியாயம்.

சூதமகாரிஷி சொல்லுகிறார்.—

ஏ ரிஷி சிரேஷ்டர்களே! யாதொரு இராசகட்க பரமேசுவரருடைய கதையைச் சிரவணம் பண்ணின மாத்திரத்தாற் சகல பாவமும் நிவர்த்தியாகிச் சகல புருடார்த்தமுங் கிடைக்குமோ அப்படிப்பட்ட கதையைச் சொல்லுகிறோம்; சிரத்தையுடனே கேளுங்கள். (க)

இந்தக் கதை முற்காலத்தில் மகாத்மாவா யிருக்கிற அகஸ்திய முனிவரால் சைமினி ரிஷியின் பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கதையை இப்போது நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். (உ)

அஃதென்னவெனில் முன் துவாபரயுகாந்தத்தில் வேதவித்துக்களுக்குள்ளே உத்தமராய் மகா யோகீசுவரராய் இருந்த வியாச

பகவானுனவர் கலியுகத்தி லுண்டாகப் போகின்றவர்களும், அற்பாயுசும் அற்ப புத்தியும் அகண்டமான வேதத்தை அத்தியயனம் பண்ணுகிறதற்குச் சமர்த்தமின்மையுமுடையவர்களாய் ஜனிக்கப் போகிற வேதாதிகாரிகளான பிரம க்ஷத்திரிய வைசியர்களுக்கு எளிதாய் அத்தியயனம் பண்ணும்பொருட்டு அகண்டமாய் ஒன்றுயிருந்த வேதத்தை இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்று நான்குவிதமாகச் சிவாக்கினையினுலே பிரித்துச் சொன்னுர். பின்பு அந்த நான்கு வேதத்தையும் பயிலர் வைசம்பாயனர் சைமினி சுமந்து என்கின்ற நான்கு சீடருக்குங் கிரமமாக உபதேசித்தார்.

அந் நான்கு முனிவரும் அந்த நான்கு வேதங்களையும் உலகத்திற் கிரமமாக விளங்கும்படி செய்வித்தார்கள். அந்த நான்கு வேதங்களுக்குள் இருக்கு வேதம் இருபத்தொரு சாகையாகவும், எசுர்வேதம் நூற்றொரு சாகையாகவும், சாமவேதம் ஆயிரஞ் சாகையாகவும், அதர்வணவேதம் ஒன்பது சாகையாகவும் பிரிக்கப் பட்டிருக்கும். அந்தப் பயிலாதி நால்வர்க்குள் சாம வேதத்தைச் செகத்தில் விளக்குவித்தவரான சைமினியானவர் அக்கினிஷ்டோமம் அதிராத்திரம் வாசபேயம் முதலான யாகங்களைச் செய்துஞ் சித்தசுத்தி யடையவில்லை. (கூ)

ஒரு காலத்தில் அந்தச் சைமினியானவர் அகஸ்திய மகா முனிவருடைய ஆச்சிரமத்தை யடைந்து, சர்வக்ஞராய் இந்திரிய செயமுள்ளவராய்ச் சொரூப நிட்டையையுடையவரான அகஸ்திய மகாரிஷியை நோக்கிச் சொல்லுகின்றுர்.

"ஏ மகாத்மாவாகிய அகஸ்திய மகாரிஷியே! வேதத்திற்சொல்லப்பட்ட கர்மங்களனைத்தையும் செய்தும் அதனுல் எனக்குச் சித்த சுத்தி நன்றுய் வரவில்லை. அன்றியும் நான் கர்ம மீமாஞ்சை என்னுஞ் சாஸ்திரத்தில் வேதங்களுக்குக் கர்ம பரத்துவஞ் சாதித்திருக்கின்றேன், அதனுலுஞ் சித்தசுத்திவரவில்லை" என்றுசொல்ல அச்சைமினியை நோக்கி அகஸ்திய மகாரிஷி சொல்லுகின்றுர்.

"ஏ சைமினியே! நீர் கர்மத்தைச் சிவார்ப்பணமாகச் செய்யாமற் கேவலங் கரும மாத்திரத்தைச் செய்ததால் உமக்குச் சித்த சுத்தி உண்டாகவில்லை. (கஅ)

சிவார்ப்பணமாகச் செய்யப்பட்ட கருமத்தாற் சித்த சுத்தி யுண்டாகுமே தவிர, கேவல கருமத்தாற் சித்த சுத்தி ஒருவருக்கு மொருகாலத்து முண்டாகமாட்டாது. (௧௪)

கருமத்தையே சாதிக்காநின்ற உமக்குப் பிரமக்ஞானம் லபிக்கமாட்டாது. கருமிகள் தமது கருமவசத்தாற் பிரமலோக பரியந்தமான புண்ணியலோகத்தை யடைந்து புனராவிர்த்தியை யடைவார்கள். அகண்ட பரிபூரண பரமசிவ சொரூப நிஷ்டா பரரான ஞானிகள் ஒருகாலத்தும் புனராவிர்த்தியை அடையமாட்டார்கள். ஏனெனில் ஞானக்கினியானது அவர்களுடைய சகல கர்மங்களையுந் தகித்துவிட்டதன்றோ?" என்றனர். (௧௫)

இவ்விதமாகச் சொல்லிய அகஸ்தியர் வசனத்தைச் சைமினி கேட்டு, உடனே அந்த மகா முனியான அகஸ்திய மகாரிஷியை நமஸ்கரித்து, "ஏ மகாரிஷியே! யாதொரு பரசிவ சொரூபஞானத்தாற் புனராவிர்த்தி ரகிதமான மோட்சபதங் கிடைக்குமோ, அந்தப் பரசிவ சொரூப ஞானத்தைத் தேவரீர் தயையினால் எனக்கிப்போது அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று கேட்டதற்கு அகஸ்தியர் உத்தரஞ் சொல்லுகின்றார். (௧௭)

ஏ சைமினியே! சொல்லுகின்றேங் கேட்பாயாக.—முற்காலத்திற் சமிவனத்திலிருக்கின்ற மதுபுட்காணிதீரத்தில் மதுப்பிரியர் என்கிற மகாரிஷிக்குப் பிரமாவினால் இந்தப் பரசிவ சொரூப ஞானம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இந்த அர்த்தத்தைப் பூர்வம் வீரபாண்டியன் என்கின்ற மகா ராசன் நம்மைக் கேட்க, நாம் அவனுக்குச் சொல்லியிருக்கின்றோம்; அதை இப்போது உமக்குச் சொல்லுகின்றோம். (௧௯)

இந்தச் சமிவனக்ஷேத்திரத்துக்குத் தக்ஷிணபாகத்தி லிரண்டு யோசனை தூரத்திற் பிரகார மாடமாளிகையினால் அலங்கரிக்கப்பட்டதாய்ச் சகல பாக்கியமு நிறைந்ததாய் நானாவித விருக்ஷ புட்பாதிகளினால் அலங்கரிக்கப்பட்டதான காளையார் கோவில் என்று விளங்கிய காளியபுரமென்றொரு சிவக்ஷேத்திரமுண்டு. (௨0)

அந்தக்ஷேத்திரத்தில் மகாபலம்பொருந்திய தனுசையுடையவனாய்ச் சத்துருக்களைச் செயித்தவனாய், சிவபூசையுடையவனாய்ச் சிவபக்திபரனாய், எப்போதும் எல்லாச் சீவரிடத்தும் தயையுள்ள

வனாய், முத்துமாலை பவளமாலை உருத்திராக்கமாலைகளையும் விபூதியையுந் தரிப்பவனாய் வீரபாண்டியன் என்கின்ற நாமமுடைய ஓர் அரசன் இருந்தனன். (உஉ)

அப்போது அந்த அரசன் காளீஸ்வரர் பிரசாதத்தால் உத்தமமான ஒரு கட்கத்தை யடைந்து, அந்தக் கட்கத்தினால் சகல சத்துருக்களான இராசர்களையும் யுத்தத்திற் செயித்து, விளங்கினான். அந்தக் கட்கத்தால் இராசர்களைச் செயித்தபடியால் அதற்கு இராசகட்கமென்று நாமம் வந்தது. சுவர்ணமயமான உறையின்கண் போடப்பட்டு விளங்கும் இராசகட்கமென்னும் அந்த வாளை அந்த அரசன் எவ்விடத்திற் சென்றபோதிலுங் கைவிடாமற் றரித்துக்கொண்டிருந்தனன். (உச)

ஒருகாலத்தில் அந்தவரசன் வேட்டையில் இச்சையுடையவனாய்க் கட்கம், பாணம், தனுசு முதலியவைகளைத் தரித்தவனாய், உடும்பின் சருமத்தால் மறைக்கப்பட்ட அஸ்தத்தை யுடையவனாய்த் திடமான கவசமுடையவனாய்ச் சொற்ப சேனைகளுடனே கிராதர்களினாலே மார்க்கங் காட்டப்பட்டவனாக ஆரணியத்திற் சென்றான். (உரு)

பனை, பலா, மா, மகிழ், இலுப்பை, அரசு, முருக்கு, பாதிரி நாவல், விளா, புன்னை, கருங்காலி, இலந்தை, வில்வம், தாணி, நாரத்தை, எலுமிச்சை, மந்தாரை, வேம்பு, தாழை, அலரி, நொச்சி இவை முதலான அனந்த விருக்ஷங்களினால் சூழப்பட்டதாய் மதமிகுந்த வண்டுகளின் கானமுடையதாய்ப் பயங்கரமான நானாவித சிம்மம் வியாக்கிர முதலான மிருகங்கள் சஞ்சரிக்கப்பட்டதாய்ச் சிம்மத்தாற் பிளக்கப்பட்ட யானையினுடைய மத்தகத்தினின்றுஞ் சிதறியுள்ள முத்துக்களையுடையதாய்க்கோரைக்கிழங்குக்காகப் பன்றியாற் பறிக்கப்பட்ட பூமியை யுடைத்தானதாய்ப் பெரிதான சர்ப்பங்களுடையதாய் மகாகோரமாயிருக்கின்ற வனத்தில் வேட்டைக்குச் சகாயமான அனேக சாமக்கிரியைகளுடனே பிரவேசித்து, அங்கங்கே வலைகளைக்கட்டிக் கொப்பங்கள் உண்டுபண்ணிச் சேனைகள் அந்தந்த மிருகங்களைச் சத்தித்து வெருட்டிக்கும்போது புலி, கரடி, பன்றி, எருமை, மான் முதலான அனேக மிருகங்கள் வெகு சத்தத்துடனே நாலுதிக்கிலும் கிளம்பிச் சஞ்சரித்தன. (௩௪)

அப்போதந்தஅரசன் வேட்டையிற் பிரியமாய் நாணிற்பூட்டப்பட்ட பாணத்தை யுடையவனாய் வலை கொப்பங்களுக்குள் அகப்பட்டனவும் தப்பி யோடாநின்றனவுமான மிருகங்களைத் தானே சங்கரித்துத் தன் சேனைகளுடனேகூட வெகு நேரம் வேட்டையாடும்போது அவ்வனத்தில் வெகுசுந்தரமாய் மகாவேகத்துடனே கூடி யோடாநின்ற ஒரு மானைக் கண்டான். (௩எ)

பின்பு அந்த மானையுஞ் சங்கரிக்க இச்சை யுள்ளவனாய்த் தானொருவனாகவே துரத்தும்போது, அந்த மானும் பயந்து சில வனத்தில் மறைந்துஞ் சில வனத்திற் றெரிந்தும் வெகுதூரம் வரைக்கும் இந்த இராசனை வஞ்சித்து இழுத்துக்கொண்டு போய் விட்டது. அப்படிப் போகும்போது அவ்வரசன் பூர்வ புண்ணிய வசத்தாற் சமிவனமென்கின்ற க்ஷேத்திரத்தையடைந்து, வெய்யிலினாற் றபிக்கப்பட்டவனாய் வருத்தம் அடைந்து, அவ்விடத்திற் பார்க்கும்போது நிர்மல சலமுடைத்தாய்ச் சகல பாவங்களையும் போக்குவதாய் மகா மங்களமானதாய் விளங்கும் மதுபுட்கரணி யென்கின்ற தீர்த்தத்தைக் கண்டு, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி, நித்திய கருமமுடித்துக் கந்தமூல பலாதிகளைப் புசித்து, அந்தத் தீர்த்தத்தைப் பானம்பண்ணி, சிரமத்தினாற் பூமியில் தழைந்துள்ள ஒரு விருக்ஷத்தின் சாயையில் வஸ்திரத்தை விரித்து இராசகட்கத்தை எதிரே வைத்துக்கொண்டு சுகமாய் நித்திரை செய்தான். (சங)

பின்பு சர்வாத்மகராய்ச் சர்வவியாபியாய்ச் சர்வசத்தியுள்ளவராய் இருக்கின்ற பரமேசுவரர் அவ்விடத்தில் நித்திரைசெய்கின்ற தம்முடைய பக்தனான வீரபாண்டிய இராசாவின் இதயத்தினுள்ள பக்தியையும் தைரிய சௌரியாதிகளையுஞ் சோதிக்க நினைத்தருளி, தமது மாயாசத்தியினால் அந்த வனத்தில் ஒரு பிராமணன் புலியாற்பற்றப்பட்டு வருந்துவதாக இராசாவிற்குத் தோற்றும்படி செய்தனர். (சச)

இப்படி ஸ்காந்தபுராணத்திற் க்ஷேத்திரகண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின் மூன்றாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் மூன்றுக்குச் சுலோகம் அ௩.

## நான்காவது வீரபாண்டியனுக்கும், மாயப்புலிக்கும் சம்வாதம் உரைக்கும் அத்தியாயம்.



அகஸ்தியமகாரிஷி சொல்லுகின்றார்.—ஏ ஜைமினியே! பின்பு புலியின் கையில் அகப்பட்ட அந்தப் பிராமணனானவன் புலி நகங்களினாலே பீறப்பட்டவனாய், "ஏ மகாராஜாவே! வியாக்கிரத்தினாற் பிடிக்கப்பட்டிருக்கிற என்னை இரட்சியும் இரட்சியும்" என்று வெகு தீன சத்தமாய் அழுதுகொண்டு கூப்பிட்டான். (க)

அந்தச் சத்தத்தை அந்த வீரபாண்டிய மகாராசா கேட்டு, உடனே வெகு பரபரப்பாக எழுந்திருந்து, முன் தான் சமீபத்தில் வைத்திருந்த இராசகட்கத்தை நாலுதிக்கிலும் பார்த்து அதைக் காணுமல் "ஆ ஆ இதென்ன ஆச்சரியம்!" என்று மனதில் நினைத்து, நிராயுதனு யிருந்தபோதிலுந் தைரியத்தினாலே புலியின் கையில் அகப்பட்ட பிராமணனை விடுவிக்கவேண்டி அதன் சமீபத்திற் சென்றான். (உ)

சமீபித்து வரும் அந்த இராசாவைப் பார்த்து அப்புலியானது "ஏ இராசாவே! நான் மிகப் பசியடைந்திருக்கின்றேன்; என் சமீபத்தில் நீ வருவாயானால் உன்தேகத்தை இந்த க்ஷணமே பக்ஷித்துப்போடுவேன்; சந்தேகமில்லை" என்று மானிட வாக்காற் சொல்ல, அந்தவசனத்தை இராசன்கேட்டு மகாதைரியத்தோடே அப்புலியைப் பார்த்துச் சொல்லுகிறான். (ஙு)

"ஏ புலியே! நல்ல அன்ன முதலியவற்றைப் புசியாமையினாலேயுந் தபசினாற் சரீரம் மிகவும் வருந்தினதினாலேயும் உலர்ந்த அஸ்திகள் தெரியும்படியா யிருக்கின்ற இந்தப் பிராமணன் சரீரத்தை நீ பட்சித்ததனால் உன் தந்தங்களுக்கு ஆனி உண்டாகுமே தவிரப் பசிநீங்கிப் போகாது. ஆதலால் நல்ல அன்னாதி புசித்ததனாற் பெருத்த மாமிசாதிகளையுடைய என் தேகத்தைப் பக்ஷி; பிராமணன் தேகத்தை விட்டுவிடு" என்று சொல்லினன். அங்ஙனம் சொன்ன அவ் விராசாவின் வசனத்தைக் கேட்டுப் புலி சொல்லுகிறது.—

"ஏ இராசனே! நீ சமுத்திரஞ் சூழ்ந்த பூமியெல்லாம் பாலித்துக்கொண்டு மாதா பிதா பந்து மித்திரர் முதலான அனைவரு

க்கும் இதஞ்செய்வோனுய் இருப்பவன். ஆகையால், சகலருக்கும் உபகாரமாயிருக்கிற அருமையான உனது தேகத்தை அற்பகாரியத்தின் பொருட்டு ஏன் வீணுய் விடுகிருய்? இப்போது உனக்குத் தோன்றிய இந்தப் புத்தியை விட்டுவிடு; உன் நகரத்திற்குப் போலாய்; என் பசி நீங்கும்பொருட்டு இந்தப் பிராமணனைப் பக்ஷிப்பேன்" என்று உரைத்த புலியின் வசனத்தை இராசன் கேட்டுக் கோபத்திஞற் கண்கள் சிவந்து, "ஏ புலியே! நீ என் முன்னே பயமின்றி, இந்தப் பிராமணனைப் பட்சித்துப் போடுவேன் என்று சொன்னு யல்லவா? இந்த வார்த்தையைக் கேட்டு நான் உபேட்சையா யிருந்தால் என் வாணுளைச் சுடவேண்டாமோ? எனது கட்கம் என்கையிலிருந்தால் உன்தேகத்தை இந்தக்ஷணம் துணுக்கெனத் துண்டிப்பேன்; தெய்வ விரோதத்தால் என் கட்கத்தைக் காணேன்; ஆதலாற் றெய்வமே பலமுடையதன்றிப் புருட முயற்சி பலமுடையதன்றே." (கசு)

"ஏ புலியே! பஞ்சபூதவிகாரமான இந்தத்தேகமானது இன்றைக்கோ, நாளைக்கோ, அன்றி அதற்கு அடுத்ததினத்திலோ காலனுற் சங்கரிக்கப்படும்! இந்தக் காரியம் என்னுற் செய்யப்பட்டது, இனி இதைச் செய்யப் போகின்றேன், இது இன்னஞ் செய்ய முடியவில்லை என்று இத்தியாதி சிந்தைகளைப்பெற்ற மூடசீவர்களைக் காலன் தயையின்றிப் பாசத்தாற்கட்டி ஒரு க்ஷணத்தில் சங்கரித்துப் போடுகிருன். ஆதலால் புத்திமானுனவன் எப்போதும் எல்லோரும் புகழும்படி தான் நற்காரியமே சாக்கிரதையாய்ச் செய்யவேண்டும். ஏனெனில் நற்காரியஞ் செய்வோருக்குச் சாராமரணுதி பயம் ஒருகாலத்தும் எவ்வளவும் நேரிடா தன்றே? ஆதலால், இவ்வசுத்தமான மாமிச பிண்டமாகிய தேகத்தில் எனக்கு ஒருபோதும் ஆசையில்லை." (கஎ)

"அன்றியும் இந்தப் பிராமணனை நான் இரட்சியாவிட்டால் எனக்கு க்ஷத்திரியத்தன்மை கெட்டுப்போகும்; ஏனெனில் வியாக்கிர சோராராதியாற் பயந்திருக்கின்ற சீவர்களுடைய பயத்தை நீக்கி இரக்ஷிக்குந் தன்மை யுடையவனையன்றே க்ஷத்திரியனென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்? க்ஷத்திரியரெல்லாம் பயந்தோரைக் காக்கவன்றே அஸ்திரசஸ்திரங்களைத் தரிப்பார்கள்? இப்போது என் கையில் கட்கமில்லாமையினுல் நீ தயவுசெய்து இந்த

மறையோனை விட்டு என்னைப் பட்சிப்பாய். என்றாற் பாண்டிய குலத்திற்கு நூதனமாக ஓர் அபவாதமும் வராதிருக்கும்படி நீ என்னிடத்தில் தயவுசெய்வாய்'' என்று அரசன் சொல்ல; அதற்குப் புலி சொல்லுகின்றது.—

"ஏ இராசனே! உனக்கு வெகு விதமான ஐசுவரியம் நிரம்பியிருக்க, இரத கச துரக பதாதிகளாகிற சேனைகளும் நிரம்பியிருக்க, சுவர்ணத்திற்குச் சமானமான காந்திபொருந்திய வெகுவித சுந்தரமாதரும் இருக்க, பின்னும் புத்திராதி சம்பத்தும் இருக்க, கிடைத்தற்கருமையான இப்போக்கியங்களை விட்டு, நீ என்னினாக மரிக்க இச்சிக்கிறாய்?'' என்றுசொன்ன புலியைப்பார்த்து அரசன் சொல்லுகிறான்.—
(௨௧)

"ஆ ஆ மின்னலுக்குச் சமானமாய் அநித்தியமாய் அனந்த ஆபத்துக்கெல்லாம் இடமாயிருக்கின்ற அரசன் முதலானவர்களுடைய செல்வத்தைச் சுடவேண்டும்; உலகத்தில் எல்லோரும் புகழும்படித் தான் எந்த நற்காரியஞ் செய்ததாற் பிரமலோகாதி பதத்தை அடையலாமோ, அப்படிப்பட்டநற்காரியமே விவேகிகளெல்லோருஞ் செய்யவேண்டுமேயன்றி, தீங்கை ஒருகாலுஞ்செய்ய ஒண்ணாது." என்று இராசன் சொல்லி, உடனே மகாதைரியமாய்த் தன்னுடைய சிரசைப் புலியின் வாயிற் கொடுத்தான். அந்த ஆச்சரியத்தைப் பார்த்து அந்தக்ஷணமே ஆகாசத்தில் நின்றும் அவ்வரசன்மேல் தேவர்கள் புட்பவருஷம் வருஷித்தார்கள். உடனே அந்தப்புலியும் பிராமணனுங் காணாமல் மறைந்துபோய்விட, இராசன் இதென்ன ஆச்சரியமென்று நினைத்து அவ்வன்னி வனத்தில் தனியே இருந்தான்.
(௨௪)

இப்படி ஸ்காந்தபுராணத்திற் க்ஷேத்திர காண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின் நான்காவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் நான்கிற்குச் சுலோகம் கoஎ.

---

## ஐந்தாவது வீரபாண்டியனுக்குத் திரிபுவனேசுவரர் பிரத்தியக்ஷமாய் அநுக்கிரகஞ் செய்த அத்தியாயம்.

பின்னர் அந்த அரசனுடைய சேனைகள் அவ்வரசனை வனங்கடோறும் தேடிக்கொண்டு வன்னிவன க்ஷேத்திரம் வந்து சேர்ந்தன.

அச்சேனைகளை நிருபன் கண்டு அவ்விடத்தில் நடந்த விர்த்தாந்தங்களெல்லாம் அந்தச் சேனுசனங்களுக்குச் சொல்லி, இந்த வனத்தில் ஏதோ ஒரு மகா ஆச்சரியமிருக்கிறது! நீங்கள் சுற்றிப் பாருங்களென்று கட்டளையிட, அரசன் வசனத்தை அந்தச் சனங்கள்கேட்டு, அவ்விடத்தில் நாலுதிக்கிலுந் தேடிப்பார்க்கும்போது, ஒரு சோலையின் நடுவில் வன்னி மரத்தின் சமீபத்தில் ஒரு மகா லிங்கத்தையும் அந்த லிங்கத்தின் பக்கத்தில் இராசகட்கத்தையுங் கண்டு, உடனே சீக்கிரமாய் இராசாவினிடத்திலே வந்து, "ஏ மகா இராசாவே! இந்தவனத்தில் வெகு சுந்தரமான ஓர்சோலையின் நடுவில் வன்னிமரச்சமீபத்திற்சச்சிதானந்த பூரணமாயிருக்கின்ற பகவானுன பரமசிவன் ஒருமகாலிங்க ரூபமாயிருக்கின்றார். அந்த மகா லிங்கத்தின்சமீபத்தில் தமது இராசகட்கமும் இருக்கிறது" என்று சொல்ல, அவ்வசனத்தை அரசன் கேட்டுப் பத்தியினுல் ஆனந்த பாஷ்பமும் உரோமாஞ்சலிசளும் உண்டாய்ச் சீக்கிரமாய் அவ்விடத்திற்குவந்து அந்த உத்தமமான மகாலிங்கத்தையும் அந்த மகா லிங்கத்தின் சமீபத்திற் றன்னுடைய இராசகட்கத்தையுங் கண்டு, உடனே சீக்கிரமாய்ப் பூமியிலே தண்டம்போலே சாஷ்டாங்கமாக வணங்கி, சிரசில் அஞ்சலிசெய்துகொண்டு மகாலிங்க ரூபமாயிருக்கிற பரமேசுவரனைத் துதிக்கத் தொடங்கினுன். (அ)

சத்திய க்ஞானுனந்தரே போற்றி, சர்வபரிபூரணரேபோற்றி, சர்வ சொரூபரே போற்றி, சர்வ சாட்சியே போற்றி, சர்வசக்தியுள்ளவரே போற்றி, சர்வாந்தரியாமியே போற்றி, சர்வஜனப்பிரியரேபோற்றி, சர்வபலனைக் கொடுக்கின்றவரே போற்றி, சந்திரசேகரரா யிருக்கின்றவரே போற்றி, விஷ்ணுவால் வணங்கப்பட்ட பாதார விந்தமுடையவரே போற்றி, மான் மழுவை உடையவரே போற்றி, சித்த வித்தியாதராதி தேவராற் றுதிக்கப்பட்டவரே போற்றி. (கூ)

இடபக்கொடியை யுடையவரே போற்றி, திரிபுராந்தகரே போற்றி, பிரமாதிகணங்களுக்கதிபரே போற்றி. (கo)

தயாசமுத்திரமாயிருக்கின்றவரே அனுக்கிரகஞ் செய்யும், கங்காதரராய்ச் சூலபாணியராய் இருக்கின்றவரே அனுக்கிரகஞ் செய்யும், செஞ்சாந்தணிந்த கொங்கைகளையுடைய பார்வதிதேவியரைத் தழுவுகின்றவரே அனுக்கிரகஞ் செய்யும். (கக)

அனந்த முடியுடையவரே போற்றி போற்றி, அனந்த நேத்திரமுடையவரே போற்றி போற்றி, அனந்த கரமுடையவரே போற்றி போற்றி, அனந்த பாதமுடையவரே போற்றி போற்றி, அனந்த நாமமுடையவரே போற்றி போற்றி, அனந்த கீர்த்தியுடையவரே போற்றி போற்றி, அனந்த கண்களுடைய புரந்தரனால் வணங்கப்பட்டவரே போற்றி போற்றி. (கஉ)

கைலாசபதியே போற்றி போற்றி, மகா ஆனந்தத் தாண்டவமுடையவரே போற்றி, பசுபதியே போற்றி, யாவராலுந் துதிக்கப்பட்டவரே போற்றி, சடாமகுடதாரியே போற்றி, நித்திய மங்களரே போற்றி, வேதாந்த வேத்தியரே போற்றி. (கங)

பரமாத்மாவே ஜெயஜெய, சகத்காரணரே ஜெயஜெய, தேவதேவரே ஜெயஜெய, கருணாநிதியே ஜெயஜெய, சகலலோக இரட்சகரே ஜெயஜெய, சர்வாத்மாவே ஜெயஜெய. (கச)

நீலகண்டரே போற்றி, கஜசரும வஸ்திரரே போற்றி, சத்தியோசாதம் வாமதேவம் அகோரம் தற்புருடம் ஈசானம் என்கிற பஞ்சமுகங்களையுடையவரே போற்றி. (கரு)

ஏ மகாதேவரே! தம்மைச் சரணமாக அடைந்த அடியேனை இரக்ஷியும்; என்று இப்படி வெகுவிதமாய்ச் சகலலோக மங்களகராயிருக்கின்ற பரமசிவனை வீரபாண்டிய மகாராசன் ஸ்தோத்திரஞ் செய்து, அடிக்கடி வணங்கிப் பக்தியினாற் பரவசனாயிருக்கும்போது, அநேககோடி சூரியப்பிரகாசராய் அனேககோடி சந்திரசீதளராய் இடபவாகனரூடராய்ப் பார்வதி சமேதராய்ச் சதுர்ப்புஜராய் நீலகண்டராய்த் திரிநேத்திரதாராய்ச் சந்திரசூடராய்க் கங்காதரராய்ச் சடாதாரியாய் மந்தகாசம்பொருந்திய முகாரவிந்தத்தையுடையவராய்த் திவ்விய மங்கள மூர்த்தியாய்க் கருணாநிதியாயிருக்கின்ற பரமசிவன் அந்த மகாலிங்கத்தினின்றும் இராசாவின் முன் பிரத்தியக்ஷமாய்த் தோன்றி, "இராசாவே! உன்னுடைய

தைரிய சௌரியாதியும் நம்மிடத்தில் உனக்கிருக்கின்ற பக்தியையுஞ் சோதிக்கும்பொருட்டு நம்முடைய மாயா சத்தியினுற் புலியினிடத்திற் பிராமணன் அகப்பட்டதாக உனக்குத் தோற்றுவித்து, இராசகட்கத்தையும் அபகரித்துக்கொண்டோம்; இப்போது அந்த இராசகட்கத்தையும் நீ எடுத்துக்கொள்" என்றுசொல்லி, அவனுக்கு வேண்டிய வரங்களெல்லாங் கொடுத்தனர். பின்பு அவ்வரசன் மிகுந்த அன்புடன் பரமசிவனை நோக்கி ஸ்தோத்திர நமஸ்காரங்கள் செய்து, அந்த இராசகட்கத்தையும் எடுத்துக்கொண்டு வெகு சந்தோஷத்துடனே "ஏ மகாதேவரே! தேவரீர் பக்கத்தில் நின்றும் இந்த இராசகட்கத்தை நான் அடைந்ததால் இன்றையமுதல் தேவரீருக்கு இராசகட்க பரமேசுவரர் என்று நாமமும், வன்னிமரத்தடியில் உம்மைத் தரிசித்தபடியாலே இந்த க்ஷேத்திரத்துக்குச் சமிவனமேன்று நாமமும், பிரசித்தமாய் விளங்கவேண்டும்" என்று பிரார்த்தித்தான். அந்தப்படியே மகாதேவர் அனுக்கிரகஞ் செய்து, அந்த மகாலிங்கத்தில் அந்தர்த்தானமாயினுர். அன்றுமுதல் அந்த மகாலிங்கத்திற்கு இராசகட்க பரமேசுவரரெனறு நாமமும், அந்த க்ஷேத்திரத்துக்குச் சமிவனமென்று நாமமும், பிரசித்தமாய் விளங்கிவருகின்றன. (கக)

பின்பு சிவபக்தருக்குள் உத்தமனுன அந்த வீரபாண்டியன் பத்தியால் அந்த இராசகட்க பரமேசுவரரை அனேகவிதமாய் நமஸ்கார ஸ்தோத்திரங்கள்செய்து, அவ்விடத்திலிருந்த விருக்ஷங்கள் செடிகொடிகள் முதலியவற்றைப் பரிசனங்களைக்கொண்டு வெட்டிச் சமபூமி பண்ணி, அவ்விடத்தில் முன்னமே இருந்து அசீரணமாகிய வெகுவிதமான பிராகாரமண்டபகோபுரவிமானுதிகளோடேகூடிய சிவாலயத்தை அனேக திரவியங்களைச் செலவிட்டு நூதனமாகப் புதுப்பித்தனன். (உ௦)

அன்றியும் மகாரதங்களை உண்டுபண்ணி மகா உத்சவங்கள் நடத்துவித்தான். பின்பு அவ்வரசன் அந்த க்ஷேத்திரத்தில் சிலகாலம் வாசஞ்செய்து, தினந்தோறும் பத்தி சிரத்தையுடனே இராசகட்க பரமேசுவரரென்கின்ற அந்த மகாலிங்கத்தைப் பஞ்சகௌவிய பஞ்சாமிர்த்தாலும் இரத்தினகலசோதகங்களினுலும் ஸ்ரீருத்திரமுதலான மந்திரங்களைக் கூறி அபிஷேகஞ் செய்து, கஸ்தூரி குங்குமப்பூ முதலிய சுகந்த திரவியங்களுடனே கூடிய சந்தனஞ் சாத்தி, மல்லிகை முல்லை சாதி சண்பகம் புன்னுகம் பாதிரி

தாமரை நீலோற்பலம் முதலிய புட்பங்களால் அலங்கரித்துக் கோமளமான வில்வ தளங்களாலும் அறுகு முதலானவைகளாலுஞ் சகஸ்திரநாம மந்திரார்ச்சனை செய்து, அகில் சந்தனஞ் சாம்பிராணி முதலானவைகளால் தூபங் கொடுத்துப் பசுவின் நெய்யினால் ஏற்றப்பட்ட தீபாராதனைகளைச் செய்து, சர்க்கரை நெய் முதலானவைகளோடு கூடிய திவ்விய அன்னங்களை நிவேதனஞ் செய்து, கற்பூர தாம்பூலமும் ஸமர்ப்பித்து, சத்திர சாமராதியான சோடச உபசாரங்களுஞ் செய்து, அனேக பிரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்திரங்கள் செய்தான். அன்றியும் நாடோறும் வெகு உபசாரத்துடனே சட்ரசோபேதமாய்ப் பிராம்மண போசனமுஞ் செய்வித்தனன். (உசு)

இப்படித் தினந்தோறும் மதுபுட்காரணி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிச் சுத்தசித்தனாய்ப் பஞ்சாட்சர செபபரனாய் இராசகட்க மகாலிங்க பூசையும் பிராமண போசனமும் நியமமாகச் செய்துகொண்டு அந்தச் சமிவன க்ஷேத்திரத்தில் வீரபாண்டியனிருக்கும் நாளில் ஒருநாள் திரிபுவனேசுரரையும் திரிபுவனேசுவரியையுந் தெரிசிக்கும்பொருட்டு நாம் அந்த க்ஷேத்திரத்திற்கு வந்தோம். (உஅ)

அப்போது அவ்வரசன் தன்புரோகிதருடனே நம்மை எதிர்கொண்டு உபசரித்து அழைத்துப்போய் விதிப்படி பூஜித்து, ஸ்தோத்திர நமஸ்காரங்களுஞ் செய்து, அஞ்சலியஸ்தனாய் வணக்கத்துடனே "ஏ மகரிஷியே! தேவரீர் அடியேனுக்கு நல்வரவாயினீர். உமது தெரிசனத்தினால் நான் கிருதார்த்தனாய்ப் பரிசுத்தனாகினேன். இன்றே என்ஜென்மமும் என்குலமுஞ் சபலமாயின. இன்றே என்நேத்திரம் களிப்படைந்தன." என்று தோத்திரஞ் செய்ய; அப்போது அரசனைப் பார்த்துநாம் இந்தப்பிரகாரஞ் சொன்னோம்.

"ஏ பாண்டியகுல உத்தமனான வீரபாண்டி மகா ராசனே! நீ ஜென்மாந்தத்திற்செய்த தபோபலத்தால் திரிபுவனேஸ்வரரென்கிற நாமமுடைய இந்த மகாலிங்க ரூபியான பரமசிவனுடைய சந்நிதானத்தை யடைந்தாய்; அதனால் நீயேகிருதார்த்தன் சந்தேகமில்லை: ஏனெனில், எக்ஞம் தானம் தபசு முதலிய சற்கருமஞ் செய்யாதவர்களுக்கு அடையக் கூடாததாயும், அடைந்தவருக்குச் சகல சித்தியுங் கொடுப்பதாயும் இருக்கின்ற உத்தம

மான இந்தக்ஷேத்திரத்தை நீ வேட்டை நிமித்தத்தால் அடைந்தாய்; ஆதலால் நீயே கிருதார்த்தன். (௩௫)

ஏ இராசனே! உன்னுடைய மனதிலிருக்கின்ற, சிவபத்தி தைரிய சௌரியாதியை யறியவேணுமென்று பரமேசுவரரானவர் தமது மாயாசத்தியால் உன்னுடைய இராசகட்கத்தை ஒளித்துப் பிராமணன் புலியின் வாயில் அகப்பட்டதாய்த் தோற்றுவித்து, அந்தப் புலிக்கும் உனக்கும் உத்தரப் பிரதி யுத்தாஞ் செய்வித்துப் பின்பு உன்னுடைய உறுதியான பத்தியால் உனக்குப் பிரத்தியட்சமாய்ப் பிரசாதஞ் செய்து, திரும்ப அந்தக் கடகத்தை நீ அடையும்படி செய்து, உன்னுடைய பிரார்த்தனையால் இராசகட்க பரமேஸ்வர ரென்கிற நாமத்தையும் அடைந்த இந்த விர்த்தாந்தமெல்லாம் நாம் ஞானதிருஷ்டியால் அறிந்தனம்.

அன்றியும், நீ தேகத்தைத் திரணம்போலே துச்சமாய் எண்ணின தைரியத்தால் மகத்தான கீர்த்தியை யடைந்தனே. (௩௯)

என்று இப்படி நாம் கூற நமது வசனத்தைச் சுத்த சித்தனை வீரபாண்டியன் கேட்டு, மாயிர் கூச்செறிந்து, மிகுந்த பக்தியுடனே இரத்தினுதிகளினுலே நன்ருப் பூசித்து, நம்மை நோக்கி இந்த வசனஞ் சொல்லத்தொடங்கினுன். (௪0)

ஒப்படி ஸ்காந்தபுராணத்திற் க்ஷேத்திர கண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின் ஐந்தாவது அத்தியாயம்
முற்றிற்று.

ஆக அத்தியாயம் (௫) சுலோகம் (௪௪எ.)

---

## ஆருவது மதுப்பிரியருக்குப் பிரமா உபநிடதார்த்தம் உரைத்த அத்தியாயம்.

வீரபாண்டியன் சொல்லுகிருன்:— ஏ ஞான யோகிகளுக்குள்ளே உத்தமராயிருக்கின்ற பகவானுன அகத்திய மகாரிஷியே தங்களுடைய தாசனு யிருக்கின்ற அடியேனுக்குத் திரிபுவனேஸ்வரென்கின்ற மகாலிங்கத்தினுடைய மகிமையைத் தாங்கள் தயைகூர்ந்து சொல்லவேண்டும். இந்த மகாலிங்கத்திற்குத் திரிபுவனேசுவர ரென்கின்ற நாமமும், இந்த அம்பிகைக்குத் திரிபுவனேசுவரி, சாலிவாடீசுவரி என்கின்ற நாமங்களும், இந்தத் தடா

கத்திற்கு மதுபுஷ்கரணி என்கின்ற நாமமுஞ் பாபவிமோசனம் என்கின்ற நாமமும் இந்த ஸ்தலத்துக்குச் சாலிவாடி யென்கின்ற நாமமும் எந்தக் காரணத்தாலுண்டாயின; இவையெல்லாம் விஸ்தாரமாய்ச் சொல்லவேணுமென்று இராசன் கேட்டனன். அதற்கு அகத்தியர் சொல்லிவந்ததை, நாம் கூறுவாமென்று சூதமுனிவர் நைமிசாரணியர்கட்குக் கூறுவா ராகின்ருர். (ரு)

இவ்விதஞ் சொன்ன அரசன் வசனத்தைச் சர்வக்ஞரான அகஸ்தியமகாமுனிவர் கேட்டு ஒரு முகூர்த்த பரியந்தஞ் சாம்ப சிவனைத் தியானம்பண்ணி, அவ்வரசன் கேட்டதற்கெல்லாம் உத்தமமான கதையைச் சொல்லத்தொடங்கினுர். "ஏ இராசனே! யாதொரு கதையைக் கேட்டமாத்திரத்தால் பிரமகத்தியாதி மகா பாவங்களைச் செய்தவரும் அந்தப் பாவங்களினீங்கி நற்கதியடைவரோ? அப்படிப்பட்ட ஒரு கதையைச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. (சு)

பூர்வம், இந்திரிய நிக்கிரகமுள்ளவரும் சகல செகத்காரணமான வஸ்துவை அறியவேணுமென்கின்ற இச்சையை யுடையவரும், மதுப்பிரியரென்கின்ற நாமத்தையுடையவருமான ஒரு ரிஷியானவர், இந்தச் சராசரங்கள் எந்த வஸ்துவினின்று முண்டாகி இலயத்தை யடைகின்றனவோ? அந்தக் காரண வஸ்துவை அறிய விரும்பி உஷ்ண காலத்திற் பஞ்சாக்கினி மத்தியிலுஞ் சீதளகாலத்தில் ஜலமத்தியிலும் இருந்து, மகா கோரமான தபசை இச்சமிவன க்ஷேத்திரத்தில் மதுபுஷ்கரணி தீரத்தில் நியமமாகச் செய்தனர். (அ)

இப்படி மகா தபசைச் செய்யும்போது அதை விக்கினம் பண்ணுகிறதற்காக இந்திரன் முதலியதேவர்கள் இடி மின்னலாதியோடே கூடிய மகா வருஷங்களையும் பயங்கரமான துர்நிமித்தங்களையும் அந்த முனிவருக்கு நான்குபக்கத்திலும் உண்டுபண்ணினுர்கள். அவைகளால் அந்தரிஷி அசைவற்றவராய்ப் பின்னும் நியமந் தவருமல் வெகுகாலபரியந்தம் தபசுசெய்யும்போது, அந்த இந்திராதிதேவர்கள் இந்த ரிஷியினுடைய தபசுக்குப்பயந்து பிரமதேவரிடத்திற்போய் அவரை நமஸ்காரம்பண்ணி, "ஏ பகவானே! தேவதைகளுக்கெல்லாம் நாயகராயிருக்கின்றவரே! செகத்தின் பீடைகளெல்லாம் நீக்குபவரே! மதுப்பிரிய ரிஷியினுடைய தபோபலத்தாற் செகத்தெல்லாம் மகத்தான பயத்தை அடைந்திருக்கின்றன. ஆதலால், அவருக்கு வேண்டிய வரத்தைக் கொடுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். (கஉ)

அதற்குப் பிரமதேவர் சொல்லுகிறார்:—“ஏ தேவதைகளே! நீங்கள் பயப்படவேண்டாம், நிர்மல மனசான இந்த ரிஷியினுடைய அபிப்பிராயம் நமக்குத் தெரியும், நீங்கள் உங்கள் உலகத்திற்குப் போகக் கடவீரென்று போக்கிவிட்டு, இந்த விர்த்தாந்தத்தை விஷ்ணுவுக்கும், உருத்திரருக்குந் தெரிவித்து அவர்களிருவருடனே மதுப்பிரியர் தபசுசெய்கின்றவன்னிவனத்திற்குவந்து, மதுபபிரியரைப் பார்த்துச் சொல்லுகின்றார். (கசு)

“ஏ மகாதவம் பொருந்திய மதுப்பிரியரே! உமது தபவிசேடத்தால் நானேயன்றி விஷ்ணுமூர்த்தியும், உருத்திரமூர்த்தியும் சந்தோஷம் அடைந்தனர். உமக்கு வரந்தரவேண்டி இதோ வந்தனம். வேண்டிய வரத்தைக் கேளும்” என்று சொன்ன பிரமதேவர் வசனத்தை ரிஷி கேட்டு, திரிமூர்த்திகளையுந் தரிசித்து வணங்கி, வேதங்களால் வெகுவாகத் துதித்து, அஞ்சலி செய்துகொண்டு சந்தோஷத்துடனே சொல்லுகின்றார். (கஎ)

“ஏ சுவாமிகாள்! நீங்கள் என் தபசாற் சந்தோஷம் அடைந்தீரேயாகில், நான் செய்த தபசிற்குப் பலமுள்ளபடி நான் வேண்டிய வரத்தைக் கொடுத்தருள வேண்டும்; அதேதென்னில், நான் சகல செகத்தின் காரணமான தெய்வத்தை அறியவேணுமென்று இச்சிக்கின்றேன்; உங்கள் மூவர்களுக்குள்ளே செகத் காரணர் யார்” என்று ரிஷி கேட்க, பிரமா சொல்லுகிறார். “ஏ முனியே! நாங்கள் மூவரும் பிரமன் விஷ்ணு உருத்திரரென்கின்ற நாமம் உடையவர்கள்; பிர்மனுகிய யான் சிருஷ்டியினும், விஷ்ணுவாகிய விவர் திதியினும், உருத்திரனுகியவவர் சங்காரத்தினும் கிரமமாய் அதிகாரிகள் ஆகின்றோம்; ஆதலால், நாங்கள்மூவரும் செகத் காரணர்” என்று சொன்னுர். (உ0)

இந்த வசனத்தை ரிஷி கேட்டு, “ஏ பிர்ம்மாவே இந்திராதிகள் அஷ்டதிக்குக்களுக்கு அதிகாரிகளானுற்போல, நீங்கள் மூவருஞ் செக உற்பத்தி திதி லயங்களுக்கு அதிகாரிகளென்று உமது வசனத்தால் நான் அறிந்தேன். இப்படி ஒவ்வொரு கிருத்தியத்தில் அதிகாரிகளாயின், உங்களை அறிந்து எனக்கு என்ன பிரயோசனம். (உஉ)

யாதாரு வஸ்துவானது, உங்கள் மூவருக்கும் அதிகாரத்தைக் கொடுத்ததோ? யாதொரு வஸ்துவினுடைய பயத்தாற் றினங்

தோறும் நியமப்படி நீங்காமற் சூரியன் தகிக்கின்ருனே? வாயுச் சலிக்கின்ருனே? அக்கினி சொலிக்கின்ருனே? தேவேந்திரன் மழை வருஷித்தல் முதலிய செய்கையைச் செய்கின்ருனே? மிருத்து சங்கரிக்கின்ருனே? யாதொரு வஸ்து செகச் சென்மாதி காரண மென்றும், யாதொரு வஸ்து பரப்பிரமமென்றும், உபநிடதங்கள் கோஷிக்கின்றனவோ? அத்தகைய பெருமைவாய்ந்த செகன்மூல காரணப் பிரமத்தையே நான் அறிய இச்சையுள்ளவனே யன்றி, உங்களை அறிய எனக்கு இச்சை இல்லை; என்று சொல்லினர். அந்த வசனத்தைத் திரிமூர்த்திகளும் கேட்டு, நீரறிய இச்சித்த வஸ்து நாங்கள் அல்லவென்று சொல்லித் தமதம லோகத்தை அடைந்தார்கள். (உச)

பின்பு, அந்த ரிஷியானவர் சமிவனத்தில் மகாவுக்கிரமான நியமத்துடனே மிகுந்த தீவரமான தபசைச் செய்தனர். அவரு டைய தீவர தபாக்கினியானது செகத்தெல்லாம் வியாபித்து தாப த்தை யுண்டாக்கும்போது, திரும்பவும் இந்திராதி தேவதைகள் பிர்மாவைச் சரணமாக அடைந்து, "ஏ பிர்மாவே! மதுப்பிரியரிஷி யானவர் ஆகாரமின்றி, உசுவாசநிசுவாச மின்றி, வெகு தீவரமான தபசைச் செய்கிருர். அந்தத் தபாக்கினியானது செகத்தையெல் லாம் மிகவுந் தகிக்கின்றது" என்று சொன்னூர்கள். (உஎ)

இந்த வசனத்தைப் பிரமதேவர் கேட்டவுடனே அன்னவாக த்திலேறிக்கொண்டு சீக்கிரமாய் மதுபுட்கரணி தீரத்திற்கு வந்து அந்த ரிஷியைப் பார்த்து, "ஏ மதுப்பிரியரே! சகலசெகத்தையுந் தகிக்கும்படியாகத் தீவர தபசு செய்ததுபோதும்; உபநிடத்துக்க ளாற் போதிப்பிக்கப்படும் யாதொரு பரப்பிரமத்தை நீர் அறிய இச்சிக்கின்றீர், அந்த இச்சை இப்போது நிறைவேறும்படி யாம் ஒருபாயத்தைச் சொல்லுகிறேம்; அதேதென்னில் "பிரமவித்தை தை ஒன்றே அந்தப் பரப்பிரமத்தை அறிகின்றதற்குச் சாட் சாது உபாயமாம். (கூஎ)

யாதொரு பரப்பிரமத்தை எக்ஞம் தானம் இதமிதம் மேத் தியமான பொசிப்பு தபசு முதலான நிட்காம கர்மங்களாற் சித்த சுத்தி பெற்றவர்களே பிரமவித்தையின் வழியாக அடைவார்கள். அஃதில்லாதவர்கள் அடையமாட்டார்கள். அந்தச் சச்சிதானந்த பரிபூரண பரமாத்துவித பிரத்தியக பின்ன பரப்பிரமத்தை அறி வதற்குப் பிரமவித்தையே முக்கியமான உபாயம்." (கூஉ)

என்று சொல்லப்பட்ட பிரமதேவர் வசனத்தை அந்தமதுப் பிரிய மகாரிஷி கேட்டு, மிகவுஞ் சந்தோஷத்துடனே பத்தியால் விதிப்படி பிரமதேவரைப் பூசித்து, "ஏ பிரமதேவரே! நான் செய்த தபசு பலமுள்ளதாகில் அந்தப் பரமசிவ சொரூபத்தை அறியும் படியான பிரமவித்தையைத் தாங்களே குருவாய் அடியேனுக்கு உபதேசம் பண்ணவேண்டும்" என்று சொன்னார். அந்த வசனத்தைப் பிர்ம்மா கேட்டு,லோகானுக்கிரக நிமித்தமாய் அந்தரிஷிக்கு முன்னம் பஞ்சாட்சர மகாமந்திரத்தை உபதேசித்துப் பின்பு உபநிடத்துக்களுக்கு அர்த்தமான பரப்பிரமத்தை உண்மையாக உபதேசித்தார். (ரு௫)

என்று இப்படிச் சொல்லி வரும் அந்த அகஸ்திய மகா ரிஷியின் வசனத்தைச் சைமினி மகா ரிஷி கேட்டு வணங்கி, "ஏ பகவானன அகஸ்த்திய மகா ரிஷியே! பூர்வம் பிர்மாவினல் மதுப்பிரிய ரிஷியின்பொருட்டு உபதேசிக்கப்பட்ட பரப்பிரம சொரூபத்தைத் தாங்கள் எனக்குத் தெரிவிக்கவேண்டும்" என்று கேட்டார். (ரு௬)

"மதுப்பிரியருக்குப் பிர்மாசொன்ன பிரகாரமாய் அகஸ்திய மகாரிஷி சைமினிக்குச் சொல்லுகின்றார்." "ஏ மதுப்பிரியரே! யாதொரு வஸ்துவானது சிருட்டி ஆரம்பசமயத்திற் றன்னுடைய மாயா சத்தியினல் முன்னம் ஈஸ்வர ரூபமாகி ஆகாசாதி பூத பௌதிகப் பிரபஞ்சத்தைச் சிருட்டித்தும், பின்பு சீவரூபமாய் அந்தப் பௌதிக சரீரங்களிற் பிரவேசித்துக் கர்த்துரு போக்தாதி ரூபங்களாகத் தோற்றுகின்றதோ? அந்த வஸ்துவே பரப்பிரமம். அதுவே பரம சிவசொரூபமென் றறியக்கடவை. ()

பஞ்சகோச விலட்சணமாய், சரீரத்திரைய வெதிரிக்தமாய், அவஸ்தாத்திரய சாக்ஷியாய், சசாதீய விசாதீய சுவகதபேத ரகிதமாய், தேச கால வஸ்து பரிச்சேத சூனியமாய் இருக்கின்ற சத்தியக்ஞானனந்த அகண்ட வஸ்துவே பரப்பிரமம்; அதுவே பரம சிவசொரூபமென் றறியக்கடவை. சச்சிதானந்த ரூபமாய் பிரத்தியகாத்மாவான யாதொரு வஸ்துவானது தனது சந்நிதான மாத்திரத்தாற் சட்சுவாதி இந்திரியங்களை ரூபாதி விடயங்களிலே எப்போதும் நியமமாக ஏவுவிக்கின்றதோ? யாதொரு வஸ்துவால் இந்த நானுவித நாமரூபமான செகத்தும் ஆகாசம்போல வியாபிக்

கப்பட்டிருக்கிறதோ, அந்த வஸ்துவே பரப்பிரமம்; அதுவே பரம சிவசொரூபமென் றறியக்கடவை. (௩அ)

இப்படிப் பரமசிவசொரூபம் எல்லாருக்கும் ஆத்மாவாய் எங்கும் பூரணமாயிருந்தால் எல்லாரும் பரமசிவ சொரூபத்தை ஏன் அறியவில்லை யென்னில், சுயம்புவான அந்தப் பரமசிவன் சிருட்டியாதியில் மனமுதலான இந்திரியங்களைப் பகிர்முகமாகச் சிருட்டித்தபடியால், அந்த இந்திரியவசத்தராகி,பகிர்முகமான சீவர்களொவ்வொருவருஞ் சர்வாந்தரரா யிருக்கின்ற பிரத்திய கபின்னமான பரமசிவத்தை யறியவில்லை. ஆனால், அந்தப் பரமசிவ சொரூபமானது ஒருவரும் ஒருகாலத்தும் அறியத் தக்க தன்றோ என்னில், எப்போது எந்தப் புருடன் தானே சென்ம புண்ணிய புஞ்ச பரிபாகத்தாற் சித்த சுத்தி உண்டாய் விஷய விரக்தனாகி அதி தீவரமான மோட்ச விச்சையுள்ளவனாய் அந்தப் பகிர்முகமான மனது முதலிய இந்திரிய பரவசனாகாமல் நதியில் எதிர்த்து நீஞ்சுகின்றவன்போல மகா தீரனாகி, அந்தர்முக மாகிறானோ, அப்போதவன் சர்வாந்தரமான பிரத்தியகபின்ன பரமசிவத்தைக் கரதலாமலகம் போல யாதொரு பிரதிபந்தமின்றியே அறிவன். (௩௯)

இப்படி அறிந்தோர்கள் அனுபவம் ஏதென்னில், சிருட்டி கர்த்தாவாயும், சிருட்டிக்கப்பட்ட செகத்தாயும், பாலன கர்த்தாவாயும், பாலிக்கப்பட்ட செகத்தாயும், சங்கார கர்த்தாவாயும், சங்கரிக்கப்பட்ட செகத்தாயும், மற்றெவ்விதத் தோற்றமாயு மிருக்கின்ற சீவேஸ்வர செகத்தனைத்தும், அகண்ட சச்சிதானந்த பரிபூரண பரமாத்துவிதமான பரமசிவ சொரூப மென்று தோன்றப் பெறுவதேயாம். (௪௦)

இந்தப் பரமசிவ சொரூபத்தை முமூட்சு அறியும் வகை எவ்விதமென்னில், ஆத்மாவை நாயகனாக வுடையதாயும், புத்தியைச் சாரதியா யுடையதாயும், மனதாகிய கடிவாளம் பூட்டிய இந்திரியங்களைப் பரிகளாகவுடையதாயுமிருக்கின்ற இச்சரீரமான இரதமானது, இவ்விந்திரியப் பரிகளால் வெகுவித விஷயமாகிய வனபூமியிற் சஞ்சரிக்கின்றபடியால், முமூட்சுவானவன் ஞான சாத்திர சென்னிய விவேக புத்தியாகிய சாரதியால் அவ்விஷய வனபூமியிற் செல்லாநின்ற இந்திரியக் கொடும் பரிகளை ஆத்ம பூமியிற் றிருப்பி நிரந்தரம் ஆத்மநிஷ்டையை அடைவதே அந்தப் பிரத்தியகபின்ன பரமசிவ சொரூபத்தை அறியும் வகையாம். (௪௧)

அந்தப் பரமசிவத்தின் சொரூபமாவது ஏதெனில், சுயம்பிரகாச சித்துரூபமே அதன் சொரூபம். எது அவ்விடத்தில் எவ்விதமாயிருக்கின்றதென்னின், எல்லாப் பூதங்களிடத்திலும் எல்லாவற்றிற்கும் ஆந்தரமான ஆத்மாவாயிருக்கின்றது. இப்படியிருந்தால் அது எல்லோருக்கும் ஏன் தோன்றவில்லை யென்னில், சூட்சுமமாய்ப் பஞ்சகோசங்களால் மறைக்கப்பட்டிருத்தலாற்றோற்றவில்லை. ஆனால் அது பரிச்சின்னமோ வெனில், ஆகாசம் போல் எங்கும் வியாபியானதாற் பரிச்சின்னமல்ல. இச்சொரூபந் திரிமூர்த்திகளுக்குள் ஒன்றோவென்னில், சர்வ கர்மங்களுக்கும் பலத்தைக் கொடுப்பதாயுஞ் சர்வபூத அதிஷ்டானமாயுஞ் சர்வசாட்சி சித்துரூபமாயும் அத்துவிதமாயும் இருக்கின்றது. பரப்பிரமமானதால் மும்மூர்த்திகளுக்குள் ஒன்றன்று. பின்னேயோவெனில்,அவித்தை மாயைஎன்கின்ற இருவித உபாதியுமன்றித் தத் துவம் பத இலக்கியார்த்தமாய்க் கேவலமாய் நிர்க்குணமாய் நித்த சுத்த புத்தமா யிருக்கின்ற அகண்ட சிதாகாசமே பரமசிவ சொரூபமாகும். (சஉ)

இவ்விதமான பரமசிவ சொரூபத்தை அறிந்தோருக்குப் பிரயோசனம் ஏதெனில், யாதொரு அதிகாரி அகண்ட பரம சிவ சொரூபமே நானென்று யாதொரு பிரதிபந்தம் அன்றியில் அபரோட்சமாக அறிகிறானே, அவனுக்குப் போக்தா போக்கியம் போகமென்கின்ற இவை முதலிய திரிபுடி யில்லாததினாலும், சகலமும் அகண்ட பரசிவமான தன் சொரூபமென்று தோற்றுவதாலும், சகல சரீர தாபமு நீங்கி நிரதிசயானந்தம் அடைவதே பிரயோசனம். அன்றியும் பிரத்திய கபின்னமான அப்பரமசிவத்தைச் சாட்சாத்காரமாய் அறிந்தால், ஆத்மாவுக்கும் அகங்காரத்துக்கும் இருந்த அன்னியோன்னியாத்தியாசமாகிய இருதயக் கிரந்தி நீங்குவதும் வேதார்த்தம் துவிதமோ? அத்துவிதமோ? அத்துவிதமானாலும் அது அனுபவத்துக்கு வருமோ? வாராதோ? என்கின்ற இவை முதலான சகல சந்தேகங்கள் நீங்குவதும்,' சஞ்சிதம் பிராரர்த்தம் ஆகாமியமென்கிற கருமத்திரயம் நீங்குவதும் பிரயோசனமாகும். (சச)

பிரத்தியட்சமாய் நானாவித நாமரூபமாகத் தோற்றிய துவிதப்பிரபஞ்சமெல்லாம் அகண்ட சச்சிதானந்த பரிபூரண பரமாத்துவிதமான பரமசிவ சொரூபமாவது எவ்விதமெனில், உபாதான

காரணமாகின்ற ஒரு மண்ணே நானுவிதமான கட கலசாதி காரியமாகிறதுபோலவும்,அதிட்டானமான ஓரிரச்சுவே சர்ப்பந் தண்டம் மாலை முதலிய ஆரோபமாய் விவர்த்திக்கின்றதுபோலவும், சர்வோபாதான காரணமாயுஞ் சர்வாதிட்டானமாயு மிருக்கின்ற ஒருபரமசிவமே சுர நர திரியக்காதி ரூபமான நானுவித நாமரூப செகத்தாகத் தோன்றுகின்றபடியால், விசாரிக்குமிடத்தில் கட கலசாதி காரியமானது காரணமான மண்ணுகின்றூற்போலவும், சர்ப்பமுதலிய வாரோபம் அதிட்டான இரச்சுவாகின்றூற்போலவும், சீவேஸ்வர செகத்தாய்த் தோற்றிய நானுவித நாமரூப செகத்தும் அகண்ட பரிபூரண சச்சிதானந்த பரமாத்துவித பரமசிவ சொரூபமேயாகும். (சரு)

இப்படிப் பரமார்த்தத்திற் சகல செகத்தும் அகண்ட சிதாகாசமான அத்வைத பரமசிவ சொரூபமா யிருந்தபோதிலும், இவ்வுண்மை அறியாதோருக்கு (அந்தகருக்குப் பகலில் சூரியோதயத்தாற் பிரகாசம் பொருந்திய செகத்து அப்பிரகாசமாய்த் தோற்றுவதுபோல) அகண்ட பரமாத்துவிதமான பரமசிவ சொரூபமே சீவேசுர செகத்தான துவைதம்போலத் தோன்றும். (சசு)

இப்படி அவிவேக திருஷ்டியிற் சொரூபமே நானுவித சரீராதிகளாய்த் தோற்றினபோதிலும் விவேகியானவன் அநித்தமான சரீரமுதலிய நானுவித உபாதிகளை நேதி நேதி என்கின்ற வாக்கால் அபவாதித்து, மிஞ்சிய அகண்ட பரிபூரண பரமசிவமே தானென்று அபரோட்சமா யறிந்தாற் சகல சோகமுநீங்கி, அச்சொரூபமாகவே மிஞ்சுவன். (சஎ)

அப் பரமசிவம் சர்வ பூரணமானதால் அஞ்ஞானத்துடனும் அதன் காரியத்துடனுஞ் சம்பந்தப்படுமோ எனில், சொரூபம் ஆகாசம்போல நிரவயவமாய் நிர்க்குணமாய் நிட்கிரியமாய் நிருவிகாரமாய் நிருமலமாய் நிர்ச்சங்கமா யிருக்கின்றபடியால், அஞ்ஞானத்துடனும் அஞ்ஞான காரியத்துடனும் கூடினபோதிலும் அவைகளுடன் சம்பந்தப்படவில்லை. (சஅ)

அந்தப் பரமசிவ சொரூபம் எப்படிச் சர்வபரிபூரணமெனில், விடயங்களினும் இந்திரியங்கள் வியாபகம், அவைகளினும் மனது வியாபகம், அதனினும் புத்திவியாபகம், அதனினும் விசேட வகங்காரம் வியாபகம், அதனினும் சாமானிய அகங்காரம் வியாபகம்,

அதனினும் அவ்வியத்தமென்கின்ற அஞ்ஞானம் வியாபகம், அதனினும் பரமசிவசொரூபம் வியாபகம். அப்பரமசிவ சொரூபத்துக்கு மேல் வியாபகம் யாதொன்று மில்லை. ஆனதால் சொரூபஞ் சர்வ பரிபூரணமாகும். (௫0)

இவ்விதமாகிய பரமசிவ சொரூபத்தைத் தன்வடிவாக அறியாமல் வேறாயறிகின்றவனுக்கு ஒருகாலத்துஞ் சோக மோக சம்சார பயம் நீங்கத் தக்கதல்லை. அவ்வகண்ட பரசிவ சொரூபமேயெல்லாம், அதுவே நானென் றறிந்தவனுக்குச் சோகமுமில்லை, மோகமுமில்லை, யாதொரு சம்சார பயமுமில்லை. (௫க)

ஏ மதுப்பிரியரே! இப்படிப் பிரமவித்தையைச் சாதன சதுஷ்டய சம்பன்னனான அதிகாரியானவன் முன்னமே சற்குருமுகமாகச் சிரவணம் பண்ணி நன்றாயறிந்துகொண்டு, பின்பு சுருதிக் கனுகூலமான யுத்தியால் நிரந்தரம் மனனம் பண்ணிப் பின்பு சிரவண மனனங்களால் நிச்சயித்தபடி அகண்ட பரிபூரண சச்சிதானந்த பரமசிவசொரூபமே நான், நானே அச்சொரூபமென்று தயிலதாரைபோல் இடைவிடாமல் செய்யப்பட்ட அந்தரங்க சாதனமான நிதித்தியாசனம் பண்ணினால், அந்தப்பரமசிவசொரூபத்தை அஞ்ஞான சமுசய விபரீதம் ஒன்றும் இன்றியே கரதலாமலகம் போல அபரோட்சமாயறியலாம். (௫உ.)

இவ்விதமான நிர்க்குண பர சிவ சொரூப ஞானத்திற்குச் சகுண பரமசிவோபாசனையுஞ் சாதனமாதலால், நிர்க்குண பரசிவ ஞானம் வரும் வரையில் முமுட்சுவானவன் பத்தியுடனே விபூதி உருத்திராக்கந் தரித்துக்கொண்டு பஞ்சாட்சர செப பரனாய்ச் சகுண பரமசிவனுடைய பூசனை ஸ்தோத்திரந் தியான முதலான உபாசனையுஞ் செய்யவேண்டுமென்று இப்படிப் பிரமதேவரானவர் மதுப் பிரியருக்குப் பிரம வித்தையை உபதேசித்துச் சகல தேவராலுந் துதிக்கப்பட்டவராய்த் தம்முடைய சத்தியலோகத்தை அடைந்தனர். (௫ச)

பின்பு அந்தரிஷியானவர் பிரமதேவர் உபதேசித்தபடி விபூதி உருத்திராக்கங்களைத் தரித்துக்கொண்டு தினந்தோறும் ஆதரவுடனே சர்வசெகத்துஞ் சச்சிதானந்த பரிபூரணபரமசிவம், அப்பரமசிவமே நானென்று நிரந்தர மனன நிதித்தியாசனஞ் செய்துகொண்டிருக்கும்போது, சர்வக்ஞராய்ச் சர்வசத்திமானாய்ச் சச்சி

தானந்த பரிபூரணராய்ப் பக்த சனப் பிரியராய்ப் பரம தயாளுவா யிருக்கின்ற பகவானுன ஸ்ரீ பரம சிவனுனவர் கோடி சூரியப் பிர காசம் போன்ற காந்தியை யுடைத்தாயும், சித்த வித்தியாதரர் முதலான சகலதேவதைகளாற் சூழப்பட்டதாயும், பஞ்சாட்சர வடிவமாயும், நான்குவேதங்களையும் நான்கு சிகரங்களாயுடையதா யும், பிரணவத்தை நடுச்சிகரமாயுடையதாயும், மற்றுஞ்சகல இலட் சணங்களுடையதாயு மிருக்கின்ற நிருமலமான திவ்விய விமான த்தி லெழுந்தருளி, மகா கைலாசத்தில்நின்றும் பூமியிலிருக்கின்ற சமிவன க்ஷேத்திரத்தில் மதுப்பிரியர் முன்னே காருண்ணியசித்த ராய்ப் பிரத்தியட்சமாயினுர். (ருஎ)

பின்பு அந்தரிஷியானவர் சச்சிதானந்த பரிபூரணராய்ச் சர் வாத்மக சொரூபராய்ச் சகலசெகன்னுயகராய்ச் சந்திரசூடராய்த் திரிநேத்திரராய்க்காளகண்டராய்ச் சதுர்ப்புசராய்ப் பார்வதிசமேத ராய்ப் பிரமவிஷ்ணு உருத்திராதிகளால் உபாசிக்கப்பட்டவராய்ப் பத்தர்களுடைய சகல துக்கமும் போக்கப்பட்டவரா யிருக்கின்ற பரப்பிரமமான பரமசிவனை அந்த விமானத்திற் பிரத்தியட்சமாய்க்கண்டு, மிகுந்த பத்தியுடனே அனந்த நமஸ்காரம் பண்ணிப் பர வசராய்த் தோத்திரஞ்செய்யத் தொடங்கினுர். (ருஅ)

இப்படி ஸ்காந்தபுராணத்திற் க்ஷேத்திரகண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தில் ஆறவது அத்தியாயம் முற்றிற்று.
ஆக அத்தியாயம் சு-க்குச் சுலோகம் உ0சு.

---

## ஏழாவது மதுப்பிரியர் பரமசிவனைத் துதிக்கும் அத்தியாயம்.

மதுப்பிரியமகாரிஷி சிவபெருமானைநோக்கிப் பிரக்ஞான கன சொரூபராயிருக்கின்றவரே அனுக்கிரகஞ்செய்யும்! தேசோமயரா யிருக்கின்றவரே அனுக்கிரகஞ் செய்யும! சர்வ சாட்சியா யிருக் கின்றவரே அனுக்கிரகஞ்செய்யும! சகலத்துக்கு மேலாகின்றவரே அனுக்கிரகஞ் செய்யும்! சர்வமூர்த்தியா யிருக்கின்றவரே அனுக் கிரகஞ்செய்யும! சர்வோபாதியும் நீங்கிய நிர்க்குண ரூபராயிருக் கின்றவரே அனுக்கிரகஞ்செய்யும! (க)

சரணமா யடைந்தாருடைய துன்பமெல்லா நீக்குவிக்கின்ற வரே அனுக்கிரகஞ்செய்யும! திரிபுரசங்காரஞ் செய்தவரே அனு

க்கிரகஞ்செய்யும்! பிரணவப் பொருளாகின்றவரே அனுக்கிரகஞ் செய்யும்! வேதங்களாற் றுதிக்கப்பட்டவரே அனுக்கிரகஞ்செய்யும்! அனுக்கிரகஞ்செய்யும்!! (௨)

யாதொருவஸ்துவினின்றுஞ் சிருட்டியாதியிற் சகலசெகத்து முண்டாகிப் பிரளயகாலத்தில் அந்தச் செகத்து யாதொருவஸ்துவினிடத்தில் இலயிக்கின்றதோ, அப்படிப்பட்ட சருவோபாதான வஸ்துவான உமக்கு நமஸ்காரம்! (௩)

பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்கின்ற பஞ்சபூதமும் யாதொரு வஸ்துவின் வடிவோ, அப்படிப்பட்ட சர்வகாரிய ரூபமான உமக்கு நமஸ்காரம்! (௪)

சரஸ்வதி சமேதரான பிரமாவா யிருந்துகொண்டு ஆகாசாதிப் பிரபஞ்சத்தைச் சிருட்டியாநின்ற உமக்கு நமஸ்காரம்! (௫)

இலக்குமி சமேதரான விஷ்ணுவா யிருந்துகொண்டு அந்தச் செகத்தையெல்லாம் இரட்சியாநின்ற உமக்கு நமஸ்காரம்! (௬)

கௌரி சமேதரான உருத்திரரா யிருந்துகொண்டு அந்தச் செகத்தையெல்லாம் பிரளயகாலத்திற் சங்கரியாநின்ற உமக்கு நமஸ்காரம்! (௭)

மகாப்பிரளயத்தில் மகா காலருத்திரரா யிருந்துகொண்டு தேவதைகள் முதலான சகல செகத்தையும் பட்சித்து மகா தாண்டவம் புரிகின்ற உமக்கு நமஸ்காரம்! (௮)

துவாத சாதித்தர்கள் ஏகாதச ருத்திரர்கள் அஷ்ட வசுக்கள் சத்தமருத்துக்கள் அக்கினி சித்தர் சாத்தியர் பிதிர்க்கள் இவர் முதலான தேவர் நரர் திரியக்காதியான சகலசெகத்தும் யாதொரு வஸ்துவின் வடிவோ, அப்படிப்பட்ட சர்வான்மாவான உமக்கு நமஸ்காரம்! (௯)

தேவரீருக்குப் பிரமவிஷ்ணு உருத்திராதிநாமங்களும் அதற்குரிய ரூபங்களும் விவகாரத்திற் கற்பிதங்களே; பரமார்த்தத்தில் ஒருநாமமும் ஒருருவமுமில்லையே; அப்படிப்பட்ட அகண்டசின்மாத்திரமான உமக்கு நமஸ்காரம்! (௧௦)

சர்வாதிஷ்டானமான யாதொரு வஸ்துவின் சத்தினாலே அசத்தான செகத்தெல்லாஞ் சத்துப்போலிருக்கின்றதோ, யாதொரு வஸ்துவின் சித்துத்தன்மையினாலே செடமான செகத்தெல்லாஞ் சித்துப்போல் விளங்குகின்றதோ யாதொரு வஸ்துவின் ஆனந்த

த்தாற் றுக்க ரூபமான செகத் தெல்லாம் ஆனந்தம்போலத் தோற்றுகின்றதோ, அப்படிப்பட்ட அகண்ட சச்சிதானந்த ரூபரான உமக்கு நமஸ்காரம்! (௧௧)

நிஷ்களரே போற்றி! நிஷ்கிரியரே போற்றி! நிருவிகாரரே போற்றி! நிரஞ்சனரே போற்றி! நிராகரரே போற்றி! நிர்த்தொந்தரே போற்றி! நிர்ச்சங்கரே போற்றி! நிஷ்பிரபஞ்சரே போற்றி! சந்திரசேகரரே போற்றி! கங்காதரரே போற்றி! திரிநேத்திரரே போற்றி! காளகண்டரே போற்றி! சதுர்ப்புயரே போற்றி! பினாகபாணியே போற்றி! தேவதேவரே போற்றி! மகாதேவரே போற்றி! பசுபதியே போற்றி! பத்தர் அபீஷ்டத்தைக் கொடுக்கின்றவரே போற்றி! (௧௨)

என்றிப்படி மதுப்பிரிய மகாரிஷியானவர் மிகுந்த பத்தியுடனே கேவல சின்மாத்திரமாயிருக்கின்ற மகாதேவரை வெகுவிதமாய் ஸ்துதித்துச் சரீரமெல்லாந் தூளிபடியும்படி அட்டாங்கமாக அனேக நமஸ்காரஞ்செய்தும், ஆனந்தபாஷ்பத்தினாலே நனைக்கப்பட்ட அங்கத்தை யுடையவராய் அஞ்சலிசெய்துகொண்டு பகவானான சாம்பமூர்த்தியை நோக்கிப் பிரார்த்திக்கிறார். (௧௩)

ஏ மகேஸ்வரரே! ஏ மகாப்பிரபுவே! ஏ சகலதேவாதிபதியே! பிரமாதிகளால் வணங்கப்பட்ட சரணாரவிந்தமுடையவரே! சந்திர சூரிய அக்கினியாகிய திரிநேத்திரமுடையவரே! பத்தர்களுடைய துக்கத்தை யெல்லாம் போக்கின்றவரே! திவ்விய மங்கள மூர்த்தியாயிருக்கின்ற மகா தேவரே! அடியேன் தேவரீரது சரணாரவிந்தத்தைத் தானே எப்போதுஞ் சரணமா யடைந்திருக்கின்றேனாகையால், தேவர் அடிமையான என்னிடத்தில் மிகுந்த கிருபை செய்தருளவேண்டும். (௧௪)

சத்திய ஞானானந்த பரிபூரணமாய் வாக்கு மனசுக்கெட்டாதவராயிருக்கின்ற தேவரீர் கருணையாற் பத்தானுக்கிரக நிமித்தமாய்த் தெரிசன மாத்திரத்தால் மோட்சத்தைக் கொடுக்கும்படியே அங்கிகரித்த திவ்விய மங்களமூர்த்தியை அடியேன்தெரிசித்ததாற் கிருதார்த்தனாயினேன் கிருதார்த்தனாயினேன், பரிசுத்தனாயினேன் பரிசுத்தனாயினேன், தன்னியனாயினேன் தன்னியனாயினேன். அடையவேண்டிய பூரணானந்தத்தையும் அடைந்தேன் அடைந்தேன். (௧௫)

ஏ சாம்பமூர்த்தியான பரமசிவமே! இந்த வன்னிவன க்ஷேத்திரத்தில் முன் சொல்லிய சகல இலட்சணமும் பொருந்திய பஞ்சாட்சர மயமான இந்த விமானத்திற் றேவரீர் மகாலிங்க சொரூபமாய் அம்பிகை யுடனே எல்லோருக்கும் எப்போதும் எல்லா அபீஷ்டமுங் கொடுக்கும்பொருட்டு நிரந்தரம் வசித்தருள வேண்டும். அன்றியும், மதுப் பிரியரென்கிற நான் இந்த க்ஷேத்திரத்திலிருக்கின்ற இந்த நதி தீரத்தில் இந்தப் புட்காரணியின் கரையிற் றபசு செய்து, தேவரீரது அனுக்கிரகத்தால் வேண்டிய சித்தியை அடைந்தபடியால், என்னுடைய நாமத்தை முன்னிட்டு இந்த நதிக்கு மதுநதி என்றும், இந்த புட்கரணிக்கு மதுபுஷ்கரணி என்றும் நாமங்கள் செகத்திற் பிரசித்தமாய் விளங்கவேண்டும். இந்த மதுநதியிலும் மதுபுட்கரணி தீர்த்தத்திலும் மிகுந்த சிரத்தையுடனே ஒருகாலாகிலும் எவர்களேனும் ஸ்நாநம் பண்ணித் தேவரீரைத் தரிசித்தால் அவர்கள் இகத்திற் சகலபோகத்தையும் புசித்து அந்தத்தில் உம்முடைய பதத்தையும் அடையவேண்டும். திரிபுவனேசுவரராயிருக்கின்ற தேவரீர் எனக்கு இந்த க்ஷேத்திரத்திற் பிரத்தியட்சமாய் விளங்கி அனுக்கிரகஞ் செய்ததாற் பத்தானுக்கிரக நிமித்தம் இந்த வன்னிவன க்ஷேத்திரத்தில் மகாலிங்க ரூபராயிருக்கின்ற உமக்குத்திரிபுவனேஸ்வரரென்கிற நாமமும், அம்பிகைக்குத் திரிபுவனேஸ்வரி என்கின்ற நாமமும் திரிலோகத்திலும் பிரசித்தமாய் விளங்கவேண்டும் என்று பிரார்த்தித்தார். அந்தப்படியே பரமசிவனும் அனுக்கிரகஞ் செய்தார். (௨௧)

அன்றுமுதற் சர்வாத்மாவாயிருக்கின்ற பரமசிவன் தன்னை வணங்கிய அன்பர்களுடைய துன்ப மெல்லாந் தீர்த்து, அவர்களுக்குவேண்டிய அபீஷ்டங்களைக் கொடுக்கிறதற்காக அந்த க்ஷேத்திரத்தில் மதுபுட்காரணிதீரத்தில் மகாலிங்க ரூபமாய்த் திரிபுவனேஸ்வரியுடனே வசிக்கிறார். அந்த மகாலிங்கத்தை ஒருகால் தெரிசனம்பண்ணினமாத்திரத்தால் மோட்சசாம்பிராச்சியஞ்சித்திக்கும்.

பின்பு அந்த மதுப்பிரியருஞ் சீவன் முத்தராய் அந்த க்ஷேத்திரத்ில்தானே வெகுரிஷிகளுடனே பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் பண்ணிச் சர்வாங்கத்திலும் அன்புடனே நிர்ம்மலமான விபூதிகொண்டு உத்தூளனம்பண்ணித் திரிபுண்டரந் தரித்துக்கொண்டு கண்டம் சிரம் கரம் முதலான ஸ்தானங்களில் உருத்திராக்கந்தரித்துக் கொண்டு மகாலிங்க ரூபியான திரிபுவனேசுவரரைச் சோடச உப

சாரத்தாற் பூசித்துப் பஞ்சாக்கரஞ் செபித்துக்கொண்டு இவ்வித மாய்ச் சொரூப நிட்டாபரராக வெகு காலங்கழித்த பின்னர் யாவ ராலும் அடைகிறதற்கு அருமையான விதேகமுத்தியை அடைந் தார். (௨௫)

பரமசிவப் பிரசாத ஏதுவான இந்த அத்தியாயத்தைப் படிக் கின்றவர், படிப்பிக்கின்றவர், கேட்கின்றவர், கேட்பிக்கின்றவர், எழுதுகின்றவர் எல்லோரும் இகத்திற் சகல பாக்கியங் கீர்த்தி முதலானவைகளையு மடைந்து, அந்தத்தில் மோட்சத்தையும் அடைவார்கள். (௨௬)

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்திலுள்ள

சமிவனமான்மியத்தின்

ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் எ-க்குச் சுலோகம் ௨௩௨.

---

## எட்டாவது சுவேத மகாராசாவின் சரித்திர முரைக்கும் அத்தியாயம்.

---

அகஸ்தியர் சொல்லுகின்றார்:— ஏ சைமினியே! பூர்வகாலத் தில் சுவேத மகா இராசாவின் புத்திரனாகிய சுவேதனென்கின்ற மகாராசனானவன் சிலகாலம் இராச்சியத்தை மனுநீதிப் பிரகாரம் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்தான். பின்பு மகாபுத்திமானான அந்தச் சுவேத மகா ராசனானவன் சோதிடத்தினாற் றன்னுடைய ஆயுசு சொற்பமாய் எஞ்சியிருக்கிறதென்று விசாரித்தறிந்து கொண்டு, தன் இராச்சியத்தைத் தன்புத்திரனிடத்தில் ஒப்புவித்து விட்டு மேன்மை யுடைய தண்டகாரணிய வனத்தை அடைந் தான். (௨)

பின்பு அவ்விடத்தில் மகத்தான தபசைச்செய்ததனால் பிரம லோகத்தை அடைந்தான். அந்தப் பிரமலோகத்தில் அவ்வரசன் பசியினால் மெத்தவும் வாதிக்கப்பட்டவனாய்ப் பிரமதேவரை நோ க்கிச் சொல்லுகின்றான். "ஏ தேவதேவராயிருக்கின்ற பிரமதேவ ரே! இதென்ன ஆச்சரியம்! ஏ சுவாமீ! மகத்தான தபோபலத் தால் துர்லபமான பிரமலோகத்தையடைந்தேன்; அப்படி அடை

ந்தும் எனக்கு எப்போதும் பசியினால் வருத்தமுண்டாகிக்கொண்டிருக்கிறது; ஆதலால், நான் என்ன செய்வேன். (௬)

என்று சொன்ன அவ்வரசன் வசனத்தைப் பிரமதேவர் கேட்டு, "ஏ இராசனே! பூமியில் விதையாதது முளையாதன்றோ? நீர் பூர்வம் பூலோகத்தில் இராசரீகம் பண்ணும்போது பிராமணர்களுக்கு அன்னதானம் அல்பமாகினும் பண்ணவில்லை; தபோவனத்தினும் உன்னுடைய தேகமாத்திரத்தை இரட்சித்துக்கொண்டிருந்தாயே யன்றிப் பிராமணர்களுக்கு ஒன்றுங்கொடுக்கவில்லை; மகத்தான தபசால் என் லோகத்தை யடைந்தும் கர்மபூமியில் அன்னதானஞ் செய்யாததினாலே இப்போது இங்குப் பசியினால் வாதிக்கப்படுகின்றாய். (அ)

ஆதலால் பூர்வம் நீ எந்தவனத்தில் உன்னுடைய தேகத்தை விட்டாயோ, அந்த வனத்தில் அந்தப் பிரேத தேகம் இருக்கின்றது. உன்னுடைய பசி தீரும்பொருட்டு அந்தப் பிரேத தேகத்தைப் பட்சிப்பாய்" என்று பிரமதேவர் சொல்லியதைக் கேட்டுப் பின்பு அவ்வரசன் வெகு துக்கத்துடனே விமானத்திலேறிக்கொண்டு கிரீடாதிகளால் அலங்கரிக்கப்பட்டவனாய் அப்ஸர மாதர்களினால் வீசப்பட்ட வெண்சாமரையை யுடையவனாய்ப் பூமியில் அந்தப் பிரேததேக மிருக்கின்ற வனத்தி லிறங்கி, அதைப் பட்சித்து மறுபடியும் விமானத்தி லேறிக்கொண்டு பிரம லோகம் போய்ச் சேர்ந்தான். (௧௨)

இப்படித் தினந்தோறும் அசுத்தமான அந்தப்பிரேத தேகத்தைப் பட்சித்துக்கொண்டு, வந்தபோதினும் அந்தத் தேகம் நாசமடையாமல்மீண்டும்மீண்டும் விர்த்தி யடைந்துகொண்டிருந்தது.

இப்படி இருக்கும்போது ஒரு காலத்தில் அந்தத் தண்டகாரணியத்தி லிருக்கின்ற தண்டகாசுரன் பிருகுமகா ரிஷியின் புத்திரியான பூப்படையாக் கன்னிகையை அடமாய் அங்கிகரித்த தோஷத்தால் அந்த வனமானது மிருக பட்சி முதலியன சஞ்சரியாத பாலை வனமாய்விட்டது. பின்பு அந்த வனத்தில் அகஸ்தியனென்கின்ற யான்போய் அதை முன்போலப் பட்சி மிருகாதிகளோடே கூடியதாகச்செய்து அவ்விடத்தில் வசிக்கும்போது ஒரு நாள் அவ்விடத்தில் அந்தத் தேவரூபமான சுவேதமகாராசாவானவன் சகல அலங்காரசம்பன்னனாய்த் தன்பிரேத தேகத்தை விமானத்திலிருந்து இறங்கிப் பட்சித்தான். (௧௩)

அதை நான் கண்டு இது என்னவென்று இராசனைக் கேட்க, அந்தத் தேவரூபமான இராசன் துக்கத்துடனே என்னைப்பார்த்து, "ஏ மகாரிஷியே! நான் பூர்வஞ்செய்த தபோபலத்தால் தேவத்துவத்தையுஞ் சத்தியலோகத்தையும் அடைந்தேன். அப்படி அடைந்தபோதிலும் பூர்வம் பிராமணர்களுக்கு நான் அன்னதானம் பண்ணாத தோஷத்தால் மகத்தான பசியினாற் றுன்பப் பட்டுப் பிரமாவின் வாக்கியத்தினாற் றினந்தோறும் விர்த்தியடையாநின்ற இந்தப்பிரேத தேகத்தைப் பட்சித்துக்கொண்டு வருகின்றேன். அப்படிப் பட்சிக்கிற என்னிடத்தில் தேவரீர் தயவு பண்ண வேண்டும்" என்றடிக்கடி பிரார்த்தித்துத் தன் கண்டத்திலிருந்த ஒரு முத்துமாலையை எடுத்துக்கொடுத்தான். (௨௦)

நான் அடையவேண்டியதை யடைந்துகிருதகிருத்தியனாயிருந்தபோதினுந் தயையினாலே அதைவாங்கிக்கொண்டேன்; வாங்கினவுடனே அவனுடைய பிரேததேகம் நசித்துப்போய்விட்டது. அவனும் அமுதபானம் பண்ணினவன்போலப் பசி யகலப் பெற்றுமிகுந்த திருப்தியை யடைந்து, வெகு சந்தோஷத்துடனே என்னை வணங்கித் துதித்து, அஞ்சலிசெய்துகொண்டு, "கைம்மாறன்றிக் கருணைசெய்யாநின்ற அகஸ்தியமகாரிஷியே! தங்களுக்கு அனந்த நமஸ்காரஞ்செய்கின்றேன்" என்று இப்படிவெகுவிதமாய் என்னைப் பிரார்த்தித்துக்கொண்டு மறுபடியுஞ் சொல்லுகிறான்.()

"ஆ! ஆ! அன்னதானமே எவைக்குமேலான தானம்; தானமே தபசுக்கெல்லாம் உத்தமதபசு; தானமே மகத்தான எக்கியம்; தானமே மகத்தான கீர்த்தி; ஏனெனில் தானத்தினாலன்றோ மகாபாவத்தால் வெகுநாளாய்ப் புசித்து வந்த இந்தப் பிரேத பக்ஷணம் நீங்கிற்று?" என்று இவ்விதமாய்த் தானத்தைத் தானே சிலாகித்து அச்சுவேதமகாராசாவானவன் விமானத்திலேறிக்கொண்டு சத்தியலோகத்தை அடைந்தான். (௨௫)

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்திலுள்ள சமிவனமான்மியத்தின் எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் ௮-க்குச் சுலோகம் ௨௫ள.

---

## ஒன்பதாவது அன்னதானமகிமை யுரைக்கும் அத்தியாயம்.



அகஸ்தியர் சொல்லுகின்றார்:—ஏ சைமினியே! பின்பு அந்த தண்டகாரணியத்தைவிட்டு நான் எனதாச்சிரமத்தை அடைந்தேன்; பின்பு அந்தச் சுவேதமகாராசாவினுடைய புத்திரனாகிய சுவேதனென்கின்ற மகா ராசாவானவன் என்னைத் தரிசிக்கிறதற்காக எனது ஆச்சிரமம் வந்துசேர்ந்தான். அப்போதவன் பிதாவினுடைய விர்த்தாந்தம் யாவையும் நான் சொல்லக் கேட்டதனால் துக்கத்தையும் சந்தோஷத்தையும் அடைந்தான். பின்பு அந்தச் சுவேதனானவன் அன்னதானம் பண்ணவேண்டுமென்று மிகுந்த இச்சையுடனே "ஏ பகவானான அகஸ்திய மகாரிஷியே! அன்னதானஞ் செய்வதற்கு உத்தமமான க்ஷேத்திரம் எதுவென்று என்னைக்கேட்டான். (௧)

பின்பு ஒரு முகூர்த்த பரியந்தம் நானுவிதமாக ஆலோசித்துப்பார்த்து, க்ஷேத்திரங்களுக்கெல்லாம் உத்தம க்ஷேத்திரமாயும், மதுபுஷ்கரணி தீர்த்தத்தோடே கூடியதாயு மிருக்கின்ற சமிவன க்ஷேத்திரமே உத்தமம். சுவர்ணவருஷீஸ்வர க்ஷேத்திரத்துக்கு உத்தரதிக்கில் அரையோசனை தூரத்திலிருக்கின்றதாயுஞ் சத்திய கிரி க்ஷேத்திரத்துக்குத் தக்ஷிண திக்கில் ஒரு யோசனை தூரத்திலிருக்கின்றதாயுந் திரிபுவனேஸ்வரரென்கிற நாமமுடைய மகா லிங்க ரூபியான பரமசிவன் எப்போதும் பிரியமுடன் வசிக்கிறதற்கு இடமாயும் இருக்கின்ற அந்தச் சமிவன க்ஷேத்திரத்திற்கு நீ போய் அன்னதானஞ் செய்யக்கடவாய். (௬)

அந்த க்ஷேத்திரத்தில் யாதொருத்தன் ஒரு கவளமாத்திரமாயினும் அன்னதானஞ் செய்கிறானோ, அவன் அக்கினிஷ்டோமாதி யாகஞ் செய்தோருக்கு எந்தப் பலனோ, அந்தப் பலத்தை அடைவன்; இதில் சமுசய மில்லை. இந்த க்ஷேத்திரத்தில் அன்னதானத்தைக் கொடுப்போன் புசிப்போன் இருவருஞ்சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு போய்ச் சத்திய லோகத்தை அடைவர்; சமுசயமில்லை என்று கூறினம். (அ)

இவ்விதஞ் சொன்ன எமது வசனத்தை அவ்வரசன்கேட்டு, உடனே அந்தக்ஷேத்திரத்தை யடைந்து, நாலுதிக்கிலுஞ் சுற்றிப்

பார்த்துச் சந்தோஷத்துடனே அவ்விடத்திலுள்ள வனங்களை யெல்லாஞ் சனங்களைக்கொண்டு சேதித்துச் சமபூமியாகச்செய்து, அந்தந்த விடத்திற் சாலி என்கின்ற செந்நெல் விளையும்படியான வாடி என்கின்ற வயல்களையுண்டுபண்ணி, உழவர்களை வரவழைத்து அவர்களைக் கொண்டு அந்தந்த வயலிற் சாலிப் பயிரிடும்படி செய்தான். (௧0)

அன்றுமுதற் சாலியோடே கூடிய வாடிகளால் இந்த க்ஷேத்திரம் விளங்குகின்றபடியால் இந்த க்ஷேத்திரத்திற்குச் சாலிவாடி என்று நாமம் பிரசித்தமாய் விளங்கும். அன்றியும் நந்த வனங்களுஞ் சோலைகளும் தடாகங்களும் ஏரிகளும் நாலுபக்கத்திலும் உண்டுபண்ணிச் செம்மையாக உழுது, புழுதிபண்ணப்பட்ட நிலத்தில் கரும்புமுதலான பயிர்களையும் உண்டுபண்ணினான். (௧௧)

பின்னும் பயிரிடும்படியான வேளாளருடைய வீதியும், வியாபாரஞ்செய்யும்படியான வணிகர்களுடைய வீதியும், க்ஷத்திரியர்களிருக்கின்ற வீதியும், அறுவகைத் தொழில்களைச் செய்யாநின்ற அந்தணர்களுடைய வீதியுங் கிரமமாகச்செய்தான். (௧௨)

பின்பு சிற்பர்களைக்கொண்டு செம்மையாக அன்னசத்திரஞ் செய்வித்து, அதில் மறையோர் முதலானவர்களுக்கு நிரந்தரம் அன்னதானஞ் செய்தான். துவாதசி தினந்தோறும் பிதிர்திருப்தியின்பொருட்டும் விசேடமாய்ப் பாயசத்தாலும் பால் தயிர் நெய் பழம் சர்க்கரை முதலியவற்றாலும், அறுவகைச் சுவையுடனே கூடிய அன்னங்களாலும், பிராமணர்களுக்குப் போசனஞ் செய்வித்துச் சந்தோஷத்தைச் செய்வித்தான். (௧௩)

ஆயிரங் கிரகணபுண்ணியகாலமும், பதினாயிரம் விதிபாதபுண்ணியகாலமும், இலட்சம் அமாவாசை புண்ணியகாலமும், துவாதசியினுடைய பதினாறி லொரு பங்குக்குச் சமானமாக மாட்டா. ஆதலாற் றுவாதசி தினந்தோறும் விசேடமாய் அன்ன தானஞ் செய்வித்தான். (௧௪)

இப்படி நெய் சர்க்கரை தேன் கலந்த நானாவிதமான பட்சணங்களோடு ருசியாயிருக்கின்ற சாலி யன்னத்தைப் பிராமணர்களுக்கு நியமமாகப் போசனஞ் செய்வித்து, அதனால் இகத்திலும் பரத்திலும் எல்லோராலுந் துதிக்கப்பட்டவனாயிருந்து இகத்தில்

நானுவித போகங்களைப் புசித்து அந்தத்திற் பரமசிவ பதத்தை அடைந்தான். (கஎ)

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திர கண்டத்திலுள்ள சமிவனமான்மியத்தின் ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம் கூ-க்குச் சுலோகம் உஎச.

---

## பத்தாவது சுதர்மைக்குத் தேவி பிரத்தியட்சமான அத்தியாயம்.

அகஸ்தியர்சொல்லுகின்றார்:—ஏ சைமினியே! சாலியவாடீஶ்வரியினுடைய கதையைச் சொல்லுகின்றேம், கேட்பாயாக. இதைக்கேட்டமாத்திரத்தால் மகத்தான ஐசுவரியமுண்டாகும்; பூர்வஞ் சாலிவாடி க்ஷேத்திரத்தில் வேளாண்மை செய்யாநின்றவனாய்ச் சிவ பத்திபரனாய் அன்புடனே நிர்மல விபூதி கொண்டு சர்வாங்கமும் உத்தூளனம்பண்ணி நெற்றிமுதலான அவயவங்களில் விதிப்படி திரிபுண்டரந் தரித்துக்கொண்டவனாய்க் கண்டம் கரம் சிர முதலானவைகளில் உருத்திராக்கமாலை தரித்துக்கொண்டவனாய்ப் பஞ்சாட்சர செப பரனாய்ச் சிவரூப்தனென்கின்ற நாம முடைத்தான ஒருவணிகன் இருந்தான். (உ)

அவன் பெரிதான மார்க்கங்களில் தடாகங்களையுஞ் சாலைகளையும் உண்டுபண்ணினன். பின்னும் யாசகர்களுக்குத் தன்கைவசமிருக்கின்ற திரவியத்தைச் சிவார்ப்பண புத்தியோடு கொடுத்தான். அந்த வணிகனுக்குச் சுதர்மை என்கிற நாமத்தையுடையவளாய் மகாபதிவிரதையாய் ஒருபாரி இருந்தாள். அவள் பர்த்தாவினுடைய மனம்போலே நடந்தும், எப்போதும் விபூதி உருத்திராக்கந்தரித்தும், பஞ்சாட்சரசெபத்தை எப்போதுஞ்செய்தும், ஏதாகிலும் நல்லவஸ்துக்கள் கிடைத்தால் அவையெல்லாம் அன்புடனே அம்பிகைக்கு நிவேதனஞ் செய்தும், திரிபுவனேஶ்வரியான அம்மையைத்தானே தினந்தோறும் நியமமாய் உபாசித்து வருவாள்.

அந்தச் சுதர்மை என்கிறவளுக்கு வெகு சுந்தரமான சரீரத்தோடு இரத்தினவல்லி என்கின்ற நாம முடைத்தான ஒரு கன்னிகை இருந்தாள். அந்தக் கன்னிகையானவள் தன்னுடைய சகிகளோடேகூடத் தினந்தோறுந் தங்களுடைய சாலிப்பயிர்நிறைந்த

வயல்களைக்கருப்பங்கொல்லை நிழலிலிருந்து சந்தோஷமாகக்காத்துக்கொண்டிருந்தாள். அவள் தினந்தோறுந் தன்தாயாரால்கொண்டுவரப்பட்ட உருசியான அன்னத்தைக் காலையில்புசித்து வயல்களைக் காத்துக்கொண்டிருக்கும்போது ஒருநாள் அந்த இரத்தினவல்லியானவள் புட்பம் பறித்து விளையாடவேண்டுமென்கின்ற இச்சையால் மதுபுஷ்கரணி தீரத்தி லிருக்கின்ற புட்பவனத்திற்குச் சகிகளுடனே போயினள். அந்தச்சமயத்தில் அவளுடைய தாயாரான சுதர்மையானவள் வயலைக் காக்கின்ற தன் கன்னிகை புசிக்கும் பொருட்டுப் புழுங்கலரிசியாற் சமைத்த தயிர்கலந்த அன்னத்தை நல்ல நல்ல ஊறுகாய்களுடன் அவ்விடத்திற்குக் கொண்டுவந்தனள். (௯)

அந்தச் சமயத்தில் திரிபுவனேஸ்வரருக்கு நாயகியான திரிபுவனேஸ்வரி என்கின்ற அம்பிகை கோவிலிலிருக்கின்ற மூல விக்கிரகத்தினின்லும் இரத்தினவல்லி வடிவம்போலத் திவ்விய அலங்காரத்தோடே கூடிய ஒருவடிவ மெடுத்துக்கொண்டு அவள் இருந்த விடத்திற்கு வந்து, அவளைப்போலச் சாலிப்பயிர் காத்துக்கொண்டிருந்தாள். பின்பு சாலிப் பயிர் நுனிகளைக் கொய்து அதைச் செவியில் அலங்காரமாய் வைத்துக் கொண்டிருக்கின்றவளாய்க் குங்குமப்பூச்சால் அலங்கரிக்கப்பட்ட கபோலத்தையுடையவளாய்க் கஸ்தூரிப் பொட்டால் அலங்கரிக்கப்பட்ட நெற்றியையுடையவளாய் மான்கன்றின் நேத்திரம்போலச் சஞ்சலமான நேத்திரங்களை யுடைத்தானவளாய் இரத்தின வல்லி வடிவெடுத்துக் கொண்டிருக்கின்ற தேவியைச் சுதர்மையானவள் கண்டு மிகுந்த சந்தோஷத்துடனே மயிர்ப் புளக முண்டாய் அவளுடைய முகாரவிந்த மதுவைத் தன்னுடைய நேத்திரமாகிற பிரமரங்களாற் பானஞ்செய்து, திருப்தி அடையாமல் நிரம்பவும் அவளிடத்திற் பிரீதியை யுடையவளாய்ச் சொல்லுகின்றாள். (௧௨)

"ஏ பெண்ணே! இவ்வளவுபோது பசியாயிருந்தனையே! இப்போது நான் கொண்டுவந்த நல்ல ஊறுகாய்களுடன் கூடிய இந்தத் தயி ரன்னத்தை இந்தப் பெரிதான தாமரை இலையில் வைத்துக்கொண்டு புசிப்பாய்" என்று சொன்னாள். (௧௩)

பின்பு தேவியானவள் சுதர்மையின் கையால் அத்தாமரையிலையில் பரிமாறப்பட்ட தயிர் அன்னத்தைச் செய்க்கரையோரத்தில் மகாபிரீதியுடனே போசனஞ்செய்தாள். (௧௪)

பின்பு சுதர்மையானவள் பச்சைக்கற்பூரங் கிராம்பு சாதிக்காய் ஏலம் முதலான வாசனைத் திரவியங்களுடனே கூடிய கொட்டைப் பாக்குச் சீவலைக் கொடுத்து, நல்ல வெற்றிலைகளையும் நல்ல சுண்ணந்தடவி மடித்து ஆதரவுடனே தேவிக்குக்கொடுத்தாள். (கரு)

கொடுத்த பின்னர் "ஏ பெண்ணே! நீ வெய்யிலிற் போய் எவ்வளவும் வருத்தப்படாதே; இந்த மாமரத்தின் நிழலில் உன் சகிகளுடனே கூட விருந்து விளையாடிக்கொண்டு சந்தோஷமாகச் சாலிப்பயிரைக் காத்துக்கொடிரு" என்று சொன்னாள். (கசா)

அந்த வசனத்தை இரத்தினவல்லி ரூபமான தேவி கேட்டுப் புன் சிரிப்பினால் வெகு சுந்தரமான முகாரவிந்தத்துடனே "அம்மா! நீ சொன்னபிரகாரமே நான் செய்கிறேனென்று சொல்லவும், சுதர்மை யானவள் தன் கிருகத்துக்குப் போய் விட்டனள். பின்பு பக்தசனப் பிரீதியை யுடையவளான தேவியும் இவ்விதம் லீலை செய்தபிறகு தன்னுடைய மூலவிக்கிரகத்தில் அந்தர்த்தானத்தை யடைந்தாள். (கஎ)

அச்சமயத்தில் இரத்தின வல்லியானவள் புட்பம்பறித்த சிரமத்தால் முகம் வாடி வேர்வை யரும்ப வருத்தத்துடன் சீக்கிரமாய் மாதா விடத்துக்கு வந்து, "அம்மா! நான் இவ்வளவு போது தோழிகளோடேகூடப் புட்பம் பறித்துக்கொண்டிருந்தேன், இப்போது எனக்கு அதிக பசியா யிருக்கிறது, சீக்கிரமாய் அன்னமிடுவாய்" என்று சொல்லக்கேட்ட சுதர்மை இதென்ன வென்று மிகுந்த ஆச்சரிய சித்தத்தவளாய்ப் "பெண்ணே! க்ஷணத்துக்கு முன்னே நான் கொண்டுவந்த தயிரன்னத்தை நீ புசித்தாயன்றோ? திரும்பவும் என் அன்னங் கேட்கிறாய்" என்று சொல்ல, மாதாவின் வசனத்தை இரத்தினவல்லி கேட்டு, "அம்மா! என் வீணாகப்பொய் சொல்லுகிறாய், நான் அன்னம் புசிக்கவில்லையே; இதோ என் வயிற்றைப்பார்" என்று சொன்னாள். (உக)

இப்படி நடந்த இந்த விர்த்தாந்தத்தை இரத்தினவல்லியினுடைய பிதாவும், அவளுடைய சகிகளும் பந்துக்களுங்கேட்டு, எல்லோரு மொருமித்துக் கூடி ஆச்சரியத்தை யடைந்து சொல்லுகிறார்கள். "இந்தச் சுதர்மையானவள் நல்ல தருமத்துடனே அம்பிகையிடத்தில் நிரந்தரம் நியமமாகப் பத்தி செய்தபடியால், அத் திரிபுவனேஸ்வரியான அம்பிகையே பக்தி விசுவாசத்தால் இரத்

தினவல்லிரூபமாய் இவளுக்குப் பிரத்தியக்ஷமாகித் தயிரன்னத்தையும் புசித்தாள். ஆதலால், இந்தத் தர்மசாலியான சுதர்மையின் பாக்கியவிசேடத்தை என்னவென்று வியந்துசொல்லுவோம்! ஆ ஆ! சச்சிதானந்த பரிபூரணியாய்ப் பரமசிவாபின்னையாய்ச் சர்வசத்திரூபியாய்ப் பக்த சனப் பிரியளாய்ப் பக்தாபீஷ்ட பலத்தைக் கொடுப்பவளாய்ச் சகல செகன்னாயகியான சாட்சாத் பராசத்திதானே இவளிடத்தில் விசுவாசத்தாற் பிரத்தியட்சமாய் அன்னத்தைப் புசித்தாளென்றால், இந்தச் சுதர்மையைப் பாரியாளாகப் பெற்ற சிவகுப்தனுடைய பாக்கியத்தை என்ன சொல்லுவோம்! என்னசொல்லுவோம்!! " என்று புகழ்ந்துகொண்டு, எல்லோருமாய், அம்பிகைஆலயத்துக்குப்போய்ச் சர்வகாமத்தையுங் கொடுத்தருளும் அம்பிகையின் சரணாரவிந்தத்தை நமஸ்கரித்தார்கள்.()

பின்பு அந்தச் சனங்கள் அம்பிகையுடைய முகத்தைப்பார்க்கும்போது சுதர்மை முன் அன்னங் கொடுக்கும்போது கண்டபிரகாரஞ் செவியில் அலங்கரித்த சாலிப்பயிர்நுனிகளையுங் கபோலத்தில் அலங்கரித்த குங்குமப் பூச்சையும் நெற்றியில் அலங்கரித்த கஸ்தூரிப் பொட்டையும் அந்தந்தபடியே கண்டார்கள். அன்றியும் அம்பிகையுடைய முகத்தில்நின்றுந் தயிரன்னவாசனைபொருந்திய காற்றும் அவர்கள் எதிரே வீசிற்று. இந்தச் சின்னங்களையெல்லாம்எல்லோருங்கண்டு மிகுந்தசந்தோஷத்துடனே அனேக பிரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்திரங்கள்செய்து, அப்பிராட்டியின் பேரருட் பிரசாத பாத்திரர்களாகித் தங்கள் கிருகங்களை அடைந்தார்கள். (௨அ)

பின்பு சுதர்மையானவள் மிகுந்த அன்புடனே திரிபுவனேஸ்வரியினுடைய சந்நிதானத்தில் அஞ்சலியஸ்தளாய் நின்று துதிக்கின்றாள். "சத்திய ஞானானந்தரூபியே போற்றி! சர்வாதிஷ்டானரூபியேபோற்றி! சர்வசாட்சி யாகின்றவளே போற்றி! சர்வாத்மசொரூபியே போற்றி! சர்வவேதாந்தப் பொருளே போற்றி! சதாசிவாபின்னையேபோற்றி! சமரசவடிவே போற்றி! சர்வபூரணியே போற்றி! சர்வசத்தியேபோற்றி! சர்வாபீஷ்டத்தைக் கொடுப்பவளே போற்றி! சர்வேஸ்வரியே போற்றி! சர்வகாரணியேபோற்றி! நிஷ்கள வடிவே பொற்றி! நிஷ்கிரிய சொரூபியே போற்றி! நிர்விகாரியேபோற்றி! நிரஞ்சனையேபோற்றி! நிராதாரியேபோற்றி!

நிர்க்குணியேபோற்றி! நித்திய சுத்த புத்தமுத்த அகண்ட அத்து வித சொரூபியே போற்றி! சகல இலட்சணமும் பொருந்திய திவ்விய மங்கள மூர்த்தியே போற்றி!'' என்று இப்படி வெகுவிதமாய்த் துதித்து, மிகுந்த சந்தோஷத்துடனே தன் கிருகத்தையடைந்தாள். திரிபுவனேஸ்வரியான தேவியானவள் வணிககன்னிகை ரூபமாய்ச் சாலிவாடியைக் காத்தபடியால் அன்றுமுதல் அந்த அம்பிகைக்கு ரிஷீஸ்வரர்கள் சாலிவாடீஸ்வரி என்று நாமத்தைச் சூட்டினர்கள். (உகூ)

பின்னும் அந்தச் சுதர்மையானவள் பர்த்தாவினுடனே அந்த அம்பிகையையும் சுவாமியையும்வெகுகாலம்வரையில் தர்மமார்க்கத்துடனே தினந்தோறும் பூசித்து, இகத்திற் சகல போகமும் புசித்து, அந்தத்தில் தேவதைகளாற் றுதிக்கப்பட்டவளாய் மகா கைலாசபதத்தை அடைந்தாள். (௩0)

அவளுடைய பர்த்தாவான சிவகுப்தனும் புத்திர பௌத்திராதிகளுடனே வெகு பாக்கியத்தை அடைந்து, சிவபத்தி செய்துகொண்டிருந்து, தனக்குள்ள பாக்கியத்தை யெல்லாஞ் சிவார்ப்பணஞ்செய்து, அந்தத்திற் பரமசிவபதத்தை அடைந்தான். (௩க)

யாவ னொருவன் சர்வாபீஷ்டத்தையுங் கொடுத்தருளும் ஸ்ரீ சாலிவாடீஸ்வரிக்குச் சுக்கிரவாரத்தில் தயிரன்னமாவது பாயசமாவது நியமமாக நிவேதனஞ் செய்விக்கின்றனோ,அவன் சகலாபீஷ்டத்தையும் அடைந்து, அந்தத்தில் மோட்சத்தையும் அடைவன்.

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின் பத்தாவது அத்தியாயம் மூற்றிற்று.
ஆக அத்தியாயம்-க0 க்குச் சுலோகம்-௩0எ.

---

## பதினோராவது தீர்த்த மகிமையுரைக்கும் அத்தியாயம்.

---

அகஸ்திய மகாரிஷி சொல்லுகிறார்:—ஏ சைமினியே இப்படி மதுநதி தீரத்தில் மதுபுட்கரணி தீர்த்தத்தோடேகூடி யிருக்கின்ற சமிவன க்ஷேத்திரத்தில் ஸ்ரீ பகவானுன திரிபுவனேஸ்வரர் திரிபுவனேஸ்வரி யுடனே மகாலிங்க ரூபியாக மதுப்பிரியாதி ரிஷிகளின

னும் பிரமனாதி தேவர்களினாலும் பூசிக்கப்பட்டவராய் எப்போதும் விளங்குகிறார். (௧)

இந்தச் சமிவன க்ஷேத்திரத்தி லிருக்கின்ற மதுபுட்கரணிதீர்த்த மகாத்மியத்தைக் கேட்பவருக்குச் சகல பாவமு நீங்கி, ஆயுசுங் கீர்த்தி முதலியவும் விர்த்தி யடையும். பூர்வம் மதுரையில் சத்துருசெய முள்ளவனாய்ச் சூரதன்மா வென்று நாமமுடைய ஒரு பாண்டியராசன் விபூதி உருத்திராக்கதாரியாய்ச் சிவபக்தனாய்ச் சிவ பக்தரிடத்திற் பிரீதியை யுடையவனாயிருந்தான். அந்தச் சூரதன்மா வென்கிற பாண்டியனுக்குச் சற்குண நிறைந்தவளாய்ச் சாதுக்களிடத்தில் விசுவாசமுள்ளவளாய்ப் பர்த்தாவிற்கு எப்போதும் பணிவிடைசெய்பவளாய் விபூதி உருத்திராக்கந் தரித்தவளாய்த் தினந்தோறும் சிவபூசை செய்பவளாய்ப் பஞ்சாட்சரத்தைச் செபிப்பவளாய்ச் சுகுணை என்னு நாமமுள்ள சுந்தரமான ஒரு பாரி இருந்தனள். (௨)

இவ்வணமிருக்க ஒருகாலத்தில் இராசசமுகத்தில் சமணரான பாஷண்டர்கள் சிலர் வந்து, இந்திரசால முதலான சில வித்தைகளைக் காண்பித்து, வேத சாஸ்திர சம்மதமான சிவமதத்தினின்றும் இராசனைத்திருப்பி வேதசாஸ்திரவிரோதமான தங்கள்சமண மதத்திற் பிரீதிவரும்படி செய்வித்தார்கள். (௩)

நான்குவருணாச்சிரமத்தினுஞ் சேராதவர்களாய் வேதசாஸ்திரார்த்தத்தை நிந்திக்கின்றவர்களா யிருக்கின்றவர்களே சமணரென்றும் பாஷண்டரென்றும்சொல்லப்படுவர். அப்படிப்பட்ட சமண பாஷண்ட மதத்தைப் பூர்வஞ்செய்த பாவ கர்மவசத்தால் இராசன் அடைந்தான். சுகுணை என்கிற அவனுடைய பாரியானவள் இராசன் சமண மதத்திற் பிரவேசித்ததைக் கண்டு மிகவும் கிலேசங்கொண்டு இரகசியமான விடத்தி லிருந்து சொல்லுகின்றாள். "ஏ! பிராணநாதனே! நமக்கெல்லாம் வேதசாஸ்திரமே பிரமாணம், பரமசிவனே கதி, சிவபூசையே சகலபுருடார்த்த சாதனம், பூச்சக்கரக்குடை வெண்சாமரங்கள் உத்தமமானபரிகள் மதங்கொண்ட கசங்கள் பின்னும் நிகரில்லாத ஐசுவரியங்கள் யாவும் சிவ பூசையின் பலம்" என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். விபூதி உருத்திராக்கதாரணத்துடனே செய்யப்பட்ட சிவபூசையின்மகிமையினாலன்றோ நமக்கெல்லாம் பல நன்மைகள் கிடைத்திருக்கின்றன?

விபூதி உருத்திராக்க தாரணத்துடனே சிவபூசை செய்யா மல் நெடுங்காலம் உசுவாச நிசுவாசத்துடனே கூடிச் சீவித்திருப் பது நீண்டகாலமிருக்கின்ற மரம்போலவுங் காற்றினை உட்கொண் டிருக்கின்ற துருத்திபோலவுமே யல்லாமல் நெடுங்காலஞ் சீவித் திருப்பதால் யாதொரு பிரயோசனமு மில்லை. விபூதி உருத்தி ராக்கந் தரியாமலுஞ் சிவபூசை செய்யாமலும் ஆகார நித்திரை பயம் மைதுனம் இவைகளை அடைந்திருப்பது மாட்டுக்குச் சமானமேயன்றி இப்போதொரு விசேடமுமில்லை. ஆனால் மாட்டு க்கு நான்குபாதம், இவனுக்கு இரண்டுபாதம்என்பதே விசேடம். இராசத்துவந் தேவத்துவமுதலான சகலபதங்களும் விபூதி உருத் திராக்கதாரணத்துடனேசெய்யப்பட்ட சிவபூசையின்மகிமையாற் கிடைக்கத்தக்கவைகளாக இருக்க, அப்படிப்பட்ட சிவபூசை முத லான சிவபக்தியைவிட்டுத் தாங்கள் ஏன் சமணமதத்தை அடைந் தீர்? இனிஅம்மதத்தை விட்டுவிடும்" என்று வெகுவாய்ப் போதி த்தனள். இப்படித் தன் பாரியினாலே போதிக்கப்பட்டும், அவ்வர சன் பாவ கர்ம வசத்தாற் பூர்வம்போல நன்மைக் கிடமான சிவ பக்தியை யடையாமல் சமணருடைய சம்பந்ததோஷத்தால் அற்ப ஆயுசாய் மரித்துப்போய்விட்டான். அந்தச் சுகுணையானவள் பர் த்தாவினிடத்திலிருந்த விசுவாசத்தால் அவ்வரசனோடு கூடவே மரித்துப் போய்விட்டனள். (கச)

பின்னர் அந்தச் சுகுணையானவள் பூர்வபுண்ணிய வசத்தால் அகளங்கபுரத்தில் இராச கன்னிகையாகப் பிறந்தாள். அந்தச் சூரதன்மாவென்கிற பாண்டியனும் சாகலபுரத்தில் இராசாவின் குமாரனைப் பூமியிற் பிறந்து பூர்வ பாவ வசத்தால் மகாவியாதியி னாலே பீடிக்கப்பட்டவனா யிருந்தான். (கரு)

அந்த அகளங்கபுரத்தி லிருக்கின்ற இராசனானவன் தன்னு டைய சுந்தரமான கன்னிகைக்கு விவாகஞ் செய்வதற்குச் சுயம் வரமண்டபம் அலங்கரித்து நாலு திக்கிலுமிருக்கின்ற அனேக அலங்காரமுள்ள அனந்தஇராசகுமாரர்களை வரவழைத்துச் சுயம் வர விவாகம்பண்ண வேண்டித் தன்னுடைய கன்னிகையிடத்தில் மாலையைக் கொடுத் தனுப்புவித்தான். பின்பு அந்தக் கன்னிகை சுயம்வரம் பண்ணுகிறதற்காக இராசகுமாரர்கள் எல்லோரையும் பார்த்துக்கொண்டுவரும்போது இந்தக் கலியாணவினோதம் பார்க்

கிறதற்காக ஒருபக்கத்திற் றனித்துவந்திருந்து ரோகங் கொண்ட தன் சரீரத்தை வஸ்திரத்தால் மறைத்துக்கொண்டிருக்கப்பட்ட சாகலபுரத்து இராசன் புத்திரனைக்கண்டு பூர்வஞானத்தாற் பூர்வ சென்மத்தில் இவன் நமது பர்த்தாவென் றறிந்து, ரோகத்தால் இளைத்திருக்கின்றஅவன் கண்டத்திற் சுயம்வரமாலையைப் போட்டனள். (உக)

பின்பு அவ்விடத்தில் வந்திருந்த இராசகுமாரரெல்லாம் அதிரூபயௌவனர்களான உத்தம இராச குமாரரை யெல்லாம் விட்டு ஒரு மகா ரோகியின் கண்டத்தில் மாலையை இவள் போட்டாளென்று நாலுபக்கத்திலும் பரிகாசம்பண்ணினார்கள். அதைஅகளங்கபுரத்து இராசன்கேட்டுத் தலைகுனிந்து மிகவும் நாணத்தைஅடைந்தான். (உ௩)

பின்பு அந்த இராச கன்னிகை யானவள் பதிவிரதா நியமந் தப்பாமல் அவனைத் தானே பர்த்தாவாக விவாகம் பண்ணிக்கொண்டு, மிகவும் நல்ல வார்த்தைகளைச் சொல்லிப் பிதாவினுடைய உத்தரவு பெற்றுக்கொண்டு அந்த ரோகியான பர்த்தாவினுடனே சாகலபுரம் போய்ச் சேர்ந்தாள். (உச)

அவ்விடத்தில் அந்த இராச கன்னிகை தன் பர்த்தாவிற்குத் தினந்தோறும் பணிவிடைபண்ணிக்கொண்டு அவன்ரோகந் தீரும் பொருட்டுப் பர்த்தாவினுடனே அனேக ஸ்தலங்களுக்குப் போய் அந்தத் தீர்த்தங்களில் ஸ்நாநம் பண்ணி அந்தத் தேவதைகளைப் பூசித்தும் பர்த்தாவிற்கு ரோகம் நீங்கவில்லை. (உ௫)

இப்படி யாத்திரை முடித்து வருங்காலத்தில் ஒருகாலத்தில் ஏதோ ஒருபுண்ணியவசத்தாற் றன் பர்த்தாவினுடனே சமிவனத்தில் மதுபுட்கரணிதீரத்தில் இருக்கின்ற திரிபுவனேஸ்வரருடைய சந்நிதானத்துக்குவந்து சேர்ந்தாள். அவ்விடத்திற்றன்னுடைய பர்த்தாவினது ரோகநீங்கவேண்டுமென்கின்ற இச்சையுடையவளாய் மிகுந்த அன்புடனே விபூதி உருத்திராக்கந் தரித்துக்கொண்டு கார்த்திகை மாசம் சோமவாரத்தில் நாலு சாமத்திலுந் திரிபுவனேஸ்வர மகாலிங்கத்தைச் சோடசோபசாரத்துடன் பூசை செய்து, இராத்திரிமுழுதும் பர்த்தாவுடன் கண்விழித்திருந்து உதயகாலத்திற் சகல மகாபாவங்களையுந் தீர்க்கும்படியான மதுபுட்கரணி தீர்த்தத்தில் பதியோடு ஸ்நாநம்பண்ணினாள். அந்த நிர்மலமான தீர்த்த

த்தில் ஸ்நானம் பண்ணின மாத்திரத்தால் அந்த இராச புத்திர
னவன் மகாரோகம் முற்றும்நீங்கப்பெற்றுச் சொர்ணத்திற்குச்
சமானமான சரீரகாந்தியை அடைந்து, இராகுவினால் விடப்பட்ட
சந்திரன்போல விளங்கினான். (௩௧)

இப்படி ரோகம் விடுபட்டு விளங்காநின்ற தன் நாதனை அந்த
இராச கன்னிகை பார்த்து, ஆனந்த பாஷ்பத் துடனே தழுவிக்
கொண்டு மிகுந்த சந்தோஷத்தை அடைந்தாள். பின்பு அந்த
க்ஷேத்திரத்தில் வசியாநின்ற மறையோர் முதலானவர்கள் இதைக்
கண்டு மகா வியாதிபீடிதனுய்ச் சரீரம் இளைத்திருந்த இந்த இராச
னவன் இந்தத் தீர்த்தத்தில் ஒருதரம் ஸ்நானம் பண்ணினமாத்
திரத்தால் மகாரோகம் நீங்கப்பெற்று இராசலட்சணத்தை அடை
ந்தான், ஆ! ஆ! ஆச்சரியமென்றுசொன்னார்கள்! அதை இராச கன்
னிகையானவள் கேட்டு மிகுந்த சந்தோஷத்தை அடைந்து, திரி
புவனேஸ்வர மகாலிங்கத்தை வெகுவிதமாய்ப் பூசித்துச் சொர்ண
புட்பங்களால் அருச்சித்து,அனந்த பிரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்
திரங்கள் பண்ணினாள். (௩௪)

இந்த இராசகன்னிகை சில காலம்வரைக்குந் தன் பர்த்தாவி
னுடனே அந்தக்ஷேத்திரத்தில் வாசஞ்செய்து தினந்தோறும்அந்த
த் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி விபூதி உருத்திராக்கந் தரித்துக்
கொண்டு பஞ்சாட்சர செபம் பண்ணிக்கொண்டு, சகலாபீஷ்ட
மூங் கொடுத்தருளும் திரிபுவனேஸ்வரரையுந் திரிபுவனேஸ்வரி
யையும் மிகுந்தபத்தியுடனே நியமமாகப் பூசித்துப் புதிதான மன்
மதனைப்போல மகா சுந்தரமாயிருக்கின்ற தன் பர்த்தாவினுடனே
சந்தோஷமாயிருந்தாள். அதற்குப் பின்பு இந்திரனோடே கூடிய
இந்திராணிபோலத் தன் பர்த்தாவினுடனே சாகல புரத்தையடை
ந்து சிலகாலம் வேண்டிய போகங்களையெல்லாம் புசித்து அந்தத்
திற் பரமசிவபதத்தைப் பதியோடு அடைந்தாள். (௩௬)

சகல மகா பாவங்களையும் போக்குந் தகுதியுடையதாயும்
சகல மனோபீஷ்டத்தையுங் கொடுக்கும்படியானதாயும் தேவ
லோகத்தி லிருக்கின்ற தேவர்களாலும் இச்சிக்கப்பட்டதாயும்
மகா மங்களமாயு மிருக்கின்ற இந்த மதுபுட்கரணி தீர்த்தம்
பூலோகத்திலிருக்கின்ற மானிடர்க்கு ஸ்நானம்பண்ணக் கிடைக்கு
மேயானால், மற்ற வெகு விதமான புண்ணியங்களா லென்ன பிர

யோசனம்? இந்தத் தீர்த்த ஸ்நானமே யாவருக்கும் போகமோக்ஷங்களைக் கொடுக்கும். (௩எ)

இந்த மதுபுட்கரணி தீர்த்தத்திற்கு மேற்புறத்தில் பிரம தீர்த்தம் என்றொரு தீர்த்தம் பிரசித்தமாயுண்டு. அந்தத் தீர்த்தத்தில் மகா பாவிகளானாலும் வருணாச்சிரம நியமந் தப்பின பதிதரானாலும் வேதமார்க்க விரோதிகளான பாஷண்டிகளானாலும் மற்றும் எவரானாலும் ஸ்நானம் பண்ணினால் அந்த க்ஷணத்திலேயே சகல பாவமு நீங்கி மோக்ஷத்தை அடைகுவர் சந்தேகமில்லை. (௩௯)

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின்
பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.
ஆக அத்தியாயம் கக-க்குச் சுலோகம் ௩௪௬.

---

## பன்னிரண்டாவது சாபவிமோசன அத்தியாயம்.

அகஸ்தியர் சொல்லுகிறார்.—ஏ ஜைமினியே! தமிழ்நாட்டுக்கு அதிபதியாய் வீரசேன பாண்டியன் என்று ஒரு மகா ராசன் பிறந்திருந்தான். பாண்டிய குலத்தில் அவதரித்த அரசர்களுக்கெல்லாம் மகரக்கொடியே உரித்தானதால், இந்த இராசனும் மகரக்கொடியை யுடையவனாய் இராச்சிய பரிபாலனம் பண்ணும்போது, ஒருகாலத்தில் மகாகோரமான ஆரணியத்தில் அதிகவேட்டையாடினான். அவ்விடத்திற் கண்ணுவ மகாரிஷி ஆச்சிரமத்தினின்றும் ஒரு கவரிமான் வெளியிற் புறப்பட்டுச் சஞ்சரித்துக்கொண்டிருப்பதை அந்த இராசன் அறியாமல் பாணத்தினால் எய்துவிட்டான். அந்தக் கவரிமான் பாணம்பட்ட வருத்தத்தால் பேரிரைச்சலிட்டுக் கொண்டு மரித்துப் போய்விட்டது. அந்தச் சத்தத்தைப் பரதுக்கஞ்சகிக்க மாட்டாத கண்ணுவ மகாரிஷி கேட்டுத் தமிழ் நாட்டுக்கதிபதியான வீரசேனபாண்டியனைக் குறித்து எனதாச்சிரமத்தில் நித்தமும் புத்திரனைப்போல் இரக்ஷிக்கப்பட்ட கவரிமானை எவன் தயையின்றி வதை செய்தானோ, அவன் வேடனாகப் போகக்கடவனென்று சபித்தார். (௫)

அந்தக் கண்ணுவ மகாரிஷி சாபத்தால் அவ்வரசன் அந்த வனத்திலே வேடனாய் விட்டனன். வேடனாய்ப் போன இராசனு

டன் வந்த சேனைசைன்னியங்கள் அவனைவிட்டுப்போய் அந்தவிர்த்தாந்தத்தைஅவனுடைய புரோகிதருக்கும் மந்திரிகளுக்குந்தெரியப்படுத்தினார்கள். பின்பு அந்த மந்திரி முதலானவர்க ளெல்லாம் அவனுடைய குமாரனான இராசசேகர பாண்டியனுக்கு இராச்சிய பட்டாபிஷேகம் பண்ண அவனும் இராச்சிய பரிபாலனம் பண்ணிக்கொண்டுவந்தான். (எ)

வேடனாய்ப்போனவீரசேனனும் முன்பு தான் இராசனாயிருந்ததை மறந்து ஒவ்வொரு வனங்களில் திரிந்து அவ்விடத்திலுள்ள மிருகங்களையெல்லாம் சங்கரித்துச் சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது, ஒருகாலத்தில் பூர்வபுண்ணிய மகிமையால் மதுபுட்கரணிதீரத்திலிருக்கின்ற சமிவனக்ஷேத்திரம் வந்துசேர்ந்தான். அவ்விடத்தில் அவன் ஒருநாள் வன சஞ்சாரத்தால் மத்தியானகாலத்திற் சூரியகிரணத்தால் தாபம் அடைந்து மிகவும் வருத்தப்பட்டு மதுபுஷ்கரணி தீர்த்தக் கரையில்வந்து, அவ்விடத்திலுள்ள நிழலிலிருக்கும்போது அந்தத் தீர்த்தத்திலுள்ள மீன்கள் சாபத்தினால் வேடனாய்ப் போன இந்த இராசனைப் பார்த்து மிகுந்த தயையினாலே ஒருமித்துக் கூடிப் பரபரப்புடனே நம்மைக் கொடியாக யுடைய இந்த வீரசேன பாண்டியன் சாபத்தினால் வேடனாய்ப் போய்விட்டான்; அந்தோ இவனைநாம் சாபத்தினின்றும்விடுவிப்போமென்று நிச்சயித்துக்கொண்டு தமது சிறகினால் மதுபுட்கரணி ஜலத்தை அடித்துக் கிளப்பி அந்தத் திவலைகளினால் அந்த இராசனுடைய சர்வாங்கமும் நனைத்துவிட்டன. (கரு)

அந்தத் தீர்த்தஜலம் சரீரத்தை நனைத்தமாத்திரத்தால் அந்த இராசன் பூர்வக்ஞானியாகிச் சாதுக்கள் மனம்போல நிர்மலமான அந்தத் தீர்த்தத்தில் இறங்கிச் சாஸ்திரவிதிப்படி ஸ்நானம் பண்ணினவுடனே சாபத்தி னின்றும் விடுபட்டவனாய்ச் சுவர்ணத்துக்குச் சமானமான காந்தி பொருந்திய இராச தேகத்தை யடைந்து, தேவரிஷி பிதிர்க்களுக்குத் தர்ப்பணஞ்செய்து, விபூதி உருத்திராக்கந் தரித்துக்கொண்டு திரிபுவனேஸ்வர மகாலிங்கத்தை அனேக பிரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்திரங்கள் செய்து, தினந்தோறுஞ் சோடச உபசாரத்துடனே பூசைசெய்துகொண்டு அந்த க்ஷேத்திரத்திற்றானே வசித்துக்கொண்டிருந்தான். (கசு)

பின்பு அவனுடைய விருத்தாந்தத்தைக் காளியபுரத்தி லிருக்கின்ற மந்திரிகள்கேட்டு வெகுசந்தோஷத்துடனே பட்டத்து

யானைக்குச் சர்வஅலங்காரமும்பண்ணி ஸ்ரீவல்லபமென்றும் சாலிவாடியென்றும் பிரசித்தமான சமிவன க்ஷேத்திரத்துக்கு வந்து வீரசேனமகாராசனைச் சகலமான ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து, அந்தக் கஜத்தின்மேலேற்றி நானுவித வாத்திய கோஷ்டங்களுடனே நகரத்துக் கழைத்து வந்து வீதிப் பிரதக்ஷிணஞ் செய்து, இரத்தினமயமான தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டதாயும் வெகுவிதமான கொடிகளினுல் அலங்கரிக்கப்பட்டதாயுமிருக்கின்றகாளியபுரத்தில்முன்போலப் பட்டாபிடேகஞ்செய்து, எல்லோரும் அந்த இராசனைச் சேவித்தார்கள். (உ0)

அன்றுமுதல் தீர்த்தங்களுக்குள் உத்தமோத்தமமான அந்த மதுபுட்கரணி தீர்த்தமானது திரிலோகத்திலுஞ் சாபவிமோசன தீர்த்தம் என்று பிரசித்தியடைந்தது. அந்தத் தீர்த்தத்தில் கிரகண புண்ணியகாலஞ் சங்கிராந்தி பருவகாலம் சோமவாரம் மகர மாசம் மாகமாசம் துலாமாசம் விஷுபுண்ணியகாலம் ஆகிய புண்ணிய தினங்களில் எவனொருவன் ஸ்நானம் பண்ணுகிறானோ, அவன் அடையத்தக்க பலத்தைச் சொல்லுவதற்குப் பரமேச்சுரர் ஒருவரே வல்லவரன்றி, என்னைப்போன்றவ ரெவரு மொருகாலத்தும் வல்லவராகார். (உக)

ஏ சைமினியே! அகஸ்தியராகின்ற என்னுடைய முகாரவிந்தத்தினின்றும் பெருகாநின்ற இந்தச் சற் கதா வமிர்தத்தை வீரபாண்டிய மகா ராசனானவன் தனது செவிகளால் பானஞ் செய்து,பரிசுத்தமன தாய்ச் சொரூபஞானத்தையடைந்து, கிருத கிருத்தியனாய்ப் பிரமானந்த பூரணனாகி மிகுந்த அன்புடனே சுவர்ண புட்பங்களால்என்னை யர்ச்சித்து, நமஸ்கார ஸ்தோத்திரங்கள் பண்ணி, என்னிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, சமிவன க்ஷேத்திரத்தினின்றுந் தனது காளியநகரத்தை யடைந்து,பரமசிவ பத்தியுடனே பரமசிவ நிஷ்டாபரனாய்ச் சிலகாலஞ் சீவன்முத்தனாய் இராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருந்து, அந்தத்தில் விதேகமுத்தியை அடைந்தான். (உரு)

ஏ சைமினியே! இப்படி முன்னம் வீரபாண்டியனுக்குச் சொன்ன சமிவனக்ஷேத்திர மகாத்மியத்தை இப்போது உமக்குச் சொன்னோம் என்று அகஸ்தியர் சொன்ன சொரூப விசாரப் பிரதானமான ஸத்கதையைச் சைமினி மகாரிஷிகேட்டுச் சுத்தசித்த

ராகி அகண்ட பரிபூரண பரப்பிரம வித்தையை யடைந்து, சீவன் முத்தராய்ச் சகலசெகத்தையும் அகண்டசச்சிதானந்த பரிபூரண பரமாத்துவித பிரத்திய கபின்ன பரமசிவாகாரமாகவே பார்த்துக் கொண்டிருந்தார். (உசு)

இவ்விதஞ் சூதமகாரிஷி சொன்ன இந்தப் பரமசிவகதையை நைமிசாரணிய வாசிகளான சௌனகாதி மகாரிஷிகள் கேட்டு, மிகுந்த சந்தோஷத்துடனே வியாச மகாரிஷிக்குச் சீடராய் மகாத்மாவாய்ப் புராணஞ் சொல்லுவதில் உத்தமராய் விபூதி உருத்திராக்கதாரியாய்ச் சொரூபநிஷ்டாபரரா யிருக்கின்ற சூத மகாரிஷியை வெகுவிதமாய்ப் பூசித்துப் புகழ்ந்து துதித்தார்கள். (உஅ)

இப்படிப்பட்ட சமிவனக்ஷேத்திரத்தில் சென்மமெடுப்பதும், மதுபுட்கரணி தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வதும், அந்த க்ஷேத்திர நாயகராகின்ற திரிபுவனேஸ்வர மகாலிங்கத்தை அம்பிகையுடனே தரிசித்துப் பூசிப்பதும் சீவரால் அடைவதற்கு மிகவும் அருமையாகும். இந்தச் செகத்தில் யாருக்காகிலும் இம்மூன்றும் பூருவ புண்ணிய புஞ்சபரிபாகத்தாற் கிடைக்குமானால், அவர்களுக்குக் கிரிச்சிரம் சாந்திராயண முதலான தபசுகளாலும் யாகதான முதலான தர்மங்களாலும், மற்றும் எவ்விதமான சாதனங்களாலும் என்னபிரயோசனம்? போகமோட்சமான சகல புருஷார்த்தமும் இந்த மூன்றினாலேயே கிடைக்கும்; இது சித்தம். இந்தச் சமிவனக்ஷேத்திர புராணத்தைக் கேட்கின்றவர், கேட்பிக்கின்றவர், படிக்கின்றவர்,படிப்பிக்கின்றவர்,எழுதுகின்றவர்,எழுதுவிக்கின்றவர், பூசை பண்ணுகின்றவர், எல்லோரும் இகத்திற் சகலபோகத்தையும் புசித்து, அந்தத்தில் அகண்ட பரிபூரண பரமசிவபதத்தை அடைவார்கள். (உக)

இப்படி ஸ்காந்தபுராணத்தில் க்ஷேத்திரகண்டத்திலுள்ள
சமிவனமான்மியத்தின்
பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஆக அத்தியாயம்-கஉ-க்குச்-சுலோகம்-நஎ௫.

சமிவனக்ஷேத்திர மான்மிய வசனம்
முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

கோவிலூர்

# ஸ்ரீ முத்துராமலிங்கதேசிகர்

என்னும்

# ஆண்டவர் சரித்திரச் சுருக்கம்.



இஃது

காரைக்குடி

மேலமடம்

சேவு. பழ. பழநியப்ப அய்யா அவர்களால்

இயற்றப்பட்டு,



ஷெ யாரால்

சென்னை :

மதராசு ரிப்பன் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



1900.

இதன் விலை அணா ௪.

# முகவுரை.

உலகத்தில் புருடர்கள் சுருதிஸ்மிருதிகளை ஓதி யுணர்ந்து அவற்றிற் சொல்லிய விதிப்படி நடத்தலோடு அப்பெரியோர் ஒழுக்கங்களைக்கண்டும் கேட்டும் ஒழுகுவது சகஜமாம். அப்பெரியோர் யாவரெனின் பிரஹ்மஞானநிஷ்டர்களாய் உலகத்திற்கு உபகாரமே செய்துகொண்டிருப்பவர். அத்தகைய பெரியோர் மகிமையைச் * சாஸ்திரங்கள் அளவின்றிக் கோஷிக்கின்றன. ஆதலால் அவர்கள் சரித்திரத்தைப் பிரசித்தப் படுத்தினுல் சிரேயசுண்டாதலன்றி அதனைப் படிப்பவர் கேட்பவர் யாவருக்கும் புண்ணியமாகிய அதிருஷ்ட பலமும், அவர் சரிதங்களைக் கேட்குங்காலத்து அவர் ஒழுகியவாறே யாமும் ஒழுகவேண்டுமென் றுண்டாகும் எண்ணமாகிய

---

சமாதிநிலயம்.

* ஒழுக்கமேபுரிந்தோனுதலதனைவிட்டொழிந்தோனுத
விழுக்கஞ்செய்மூர்க்கனுதல்பண்டிதனுதலெண்ணில்
பழிப்பருஞானந்தன்னின்முயல்பவன்பணியத்தக்கோன்
றெழத்தகுஞானியென்றுசொல்லவேண்டுவதுமுண்டோ.

பலன்கள்வேண்டியபரிசெலாம்பலித்திடும்பரமதத்துவஞானி
நலங்கொணுமமாமந்திரஞ்செபித்திடநயந்தவனீராடுஞ் [ய்
சலங்கொடீர்த்தமாமவன்றிருமேனியேசகலதெய்வமுஞ்செவ்வா
மலர்ந்தவாசகமறுபிறப்பெனவருமயற்பிணிமருந்தாகும்.

பிரமகீதை.

தேசிகன்றன்றிருமேனிசிந்தைசெய்யச்சிவனைச்சிந்தித்தானுஞ்செம்பொற்றுளிற், பூசனைசெய்திடவெங்குமாகிநின்றபூரணனையினிதாகப்பூசித்தானு, நாசமிலாச்சிவனுமநவின்றுனுண்டநாயகன்றன்றிருநாமநவின்றுனுகி, லீசனையேயிகழ்ந்தானுங்கண்ணிற்காணவெழுந்தருளுந்திருக்கோலமிகழ்ந்தானுகில்.

ஈசனுஞானியிருந்துளவிடத்தேயிருப்பதுமுத்திதானந்தத்
தேசிகனேவல்செய்பவன்காலென்சென்னியிலிருப்பதுமன்னி
மாசிலாப்பரமஞானியாமுனிக்குமகேசனுமொப்பலன்மதிக்கி
லாசிலாவரியுமொப்பலனுனுமொப்பலனேவரொப்பாரே.

திருஷ்டபலமு முண்டாமெனக்கருதி, முற்கூறிய விலக்கண மமைந்தவர்களும் கோவிலூர்ப்பரம்பரையில் முதன் மூன்றுபட்டத் திருந்தவர்களுமாகிய ஆண்டவர், துறவுசுவாமிகள், கருணாநிதி சுவாமிகள் என்னும் மூவர் சரித்திரத்தையும் அவர்கள் மாணாக்கர்களால் கேட்டவண்ணம் சுருக்கிச் சிறு புத்தகரூபமாக்கி, அதற்கு ஆண்டவர் சரித்திரச்சுருக்கமெனப் பெயரிட்டு, ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிகர் அநுமதியின்பேரில் பதிப்பிக்கலானேன்.

காரைக்குடி - சேவு - பழ.

---

சூதசங்கிதை.

ஞாலமுண்டவன்றலைமிசைசுமப்பன்மெய்ஞ்ஞானிவேண்டுவதெல்
மாலமுண்டவனவன்பின்னேதிரிகுவனவனடித்துகட்கன்றே [லா
சிலமன்னருமற்றுளதேவருந்திசைதிசைபணிந்தேத்தக்
காலிரண்டையுஞ்சிரமிசைவையெனக்கழறுவன்கமலத்தோன்.

கனவினிற்காணுங்காட்சிபோற்சகத்தைக்காணுமெய்ஞ்ஞானிகடம்மை, மனுடனேவன்றித்தேவனென்றெண்ணுமனநினைவினைமாற்றி, யினையனபரமசிவனுருக்கொண்டிவ்வுலகுய்யவெழுந்தருளினனென், றணையவைநினைப்போருத்தமரல்லோராடியை நோக்குமந்தகரே.

சசிவர்னபோதம்.

ஞானியைநரன்சுரனெனுதொழிக
ஞாலமுயநாதனருளால்.
மேனியதுகொண்டுதனைநல்கவரு
மென்றறையும்வேதமுடிவே.

என்பன பெரியோர் மகிமையைக் கூறும் சாஸ்திரங்களாம்.

---

சிவமயம்.

# ஆண்டவர்ஸ்துதி.

கருணாநிதி அருளிச்செய்தது

வானவரசமாந்தொடர்பிணுலுலகோர்வழுத்துறும்வன்னியைங்கர
வானவரதனமணியறுமுகனைமாசறுகொற்றவாளிறையை [ணை
வானவர்முதுவன்பாலனவலவன்வணங்குநற்றிருநெலைமாதை
வானவரதனுமுத்துராமேசவள்ளலைவணங்கிவாழ்த்திடுவோம்.

சித்தரும்பரவாநின்றசீர்மிகுங்கழனிதன்னிற்
பித்தனுமெனையுமாளப்பேரருளுருவாயுற்ற
முத்தனுமுத்துராமமுதல்வனற்கமலபாத
நித்தமுந்தொழுதுவாழ்த்திநெஞ்சினிலிருத்தல்செய்வாம்.

---

## பொன்னம்பலதேசிக ரவர்கள்

அருளிச்செய்தது.

பத்துநான்கும்பதைப்பொழிந்தேகிடச்
சுத்தஞானசுகோததிமூழ்கிட
முத்துராமமுனைவன்றிருப்பத
நித்தநாண்மலர்நெஞ்சத்திருத்துவாம்.

---

## சொர்னநாதபுரம் - பழநியப்பய்யா அவர்கள்

இயற்றியது.

வெண்பா.

வெய்யவினைதீர்க்குமடிமேலோர்வணங்குமடி
யையந்திரிபையகற்றுமடி—மெய்யன்ப
ருய்யுநெறிகாட்டுமடியொப்பில்கழனியில்வாழ்
அய்யன்முத்துராமனடி.

கண்ணுதலுஞ்செஞ்சடையுங்கறைமிடருந்தான்கரந்துகயிலைநீங்கி
எண்ணரியமுத்துராமேந்திரய்யனெனுநாமமெங்குமோங்க
மண்ணுலகிலடியார்க்குமுத்திநிலைபிரமமெனவகுக்கவந்த [ம்.
வண்ணமளிக்குங்கழனிநகரினில்வாழ்குருபரனைவணங்கிவாழ்வா

திருவாடுதுறை யாதீனத்து மஹாவித்துவான்

திரிசிரபுரம்

## மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களால்

இயற்றப்பட்டது.

மேயபெருங்கழனிநகர்கோவிலூரெனும்பேர்
மேவவிறையாலயத்தைவிரித்தவருட்பெரியோன்
பாயபுனறிரண்டாலியாயதெனச்சுத்தப்
பரப்பிரமமிவ்வுருக்கொண்டுற்றதெனும்புரண
னுயபுகழ்வேதாந்தசிரவணஞ்செய்துலகி
லளவிலர்சைதன்னியமாகப்புரிந்தவறவோன்
தூயமுத்துராமலிங்கதேசிகனென்றுரைக்குஞ்
சோதிலிங்கசொரூபனெனுஞ்சோதியையேத்தெடுப்பாம்.

---

## ஸ்ரீ துறவுசுவாமிகள் ஸ்துதி.

திருவாடுதுறை யாதீனம் மஹாவித்துவான்

திரிசிரபுரம்

## மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள்

இயற்றியது.

துறவொழுக்கமனைத்துமொருவடிவுகொண்டாலன்ன
தூயவன்றன்மயமாகயாவையுங்கண்டிருப்போன்
மறவொழுக்கங்கடிந்துயிர்கள்சுவானுபவமருவ
வயங்கியவேதாந்தசிரவணமேற்றும்வலியோ
னறவொழுக்கந்தலையெடுப்பக்காரணங்கண்டுவப்போ
னடங்குமிடமாகியசிதாகாசப்பிரிய
னுறவொழுக்கம்வளர்த்தவருணசலதேசிகனென்
றுரைத்திடுநந்தீசனெனுமொருவனைவாழ்த்திடுவாம்.

---

## சொர்னநாதபுரம் - பழநியப்பய்யா அவர்கள்

இயற்றியது.

வெண்பா.

இன்பமளிக்குமடியென்வினையைநீக்குமடி
துன்பங்களெல்லாந்தொலைக்குமடி—பன்பார்
கருணகரனுங்கழனிநகர்வாழு
மருணசலன்சேவடி.

விருத்தம்.

செங்கமலமலர்போன்றமுகந்தானெங்கேசிறியணிவாவென்றழைத்ததிருவாயெங்கே, யங்கமெலாநீறணியுமழகதெங்கேயரியவெண்கோவணங்கட்டுமரைதானெங்கே, சங்கையறப்பொருளோதுஞ்சமர்த்துமெங்கேதாயினிலுமிகச்சிறந்ததயைதானெங்கே,மங்கையரைமிகப்பழிக்குங்கவிதானெங்கே வளலருணசலமுன்போல்வந்தாள்வாயே.

---

சிதம்பர அய்யாவென்னும்

## கருணாநிதிஸ்துதி.

### சொர்னநாதபுரம் - பழநியப்பய்யா

இயற்றியது.

விருத்தம்.

மதம்படுகடைமினர்தம்மைபலுட்படாமலீசன்
பதம்பெறவெனக்குமேன்மைபாலிக்குமருணைக்குன்றின்
இதம்பெறுதுணைவனுகியென்னுயிர்த்துணையுமான
சிதம்பரப்பெரியோன்செம்பொற்சேவடிசென்னிசேர்ப்பாம்.

---

திருவாடுதுறை யாதீனம் மகாவித்துவான்

திரிசிரபுரம்

### மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள்

இயற்றியது.

மேலாயதுறவினுக்கோர்துணையாகியுள்ளான்
விரிந்தபலபுவனமுங்கான்றிடுசோற்றிற்கண்டோ
னுலாயமறைமுடியின்பொருள்விளங்கவெடுத்து
நலமாணவர்க்கருளித்தன்மயமாக்கிடுவோன்
பாலாயசிவதருமம்பற்றறப்பாலிப்போன்
பரப்பிரமசுவாநுபூதியிற்சிறந்தமேலோ
னூலாயயாவுமுணர்ந்தவர்மனுவினெடுத்து
நுவலுமொருசிதம்பரதேசிகனெனுமாபெரியோன்.



சிவமயம்.

ஸ்ரீசற்குருநாதன் துணை.

# ஆண்டவர் சரித்திரச் சுருக்கம்.



பரதகண்டத்திலே பாண்டியநாட்டிலே கீழ்த்திசையிற் றிருப்பெருந்துறையும், தென்றிசையிற் கண்டதேவியும், மேற்றிசையிற் றிருப்புத்தூரும், வடதிசையிற் றிருமெய்யமுமாகிய இந்நான்கு க்ஷேத்திரங்களையும் எல்லையாக வுடையதாய், மகாதவத்தினராகிய மதுப்பிரிய இருஷியின் வேண்டுகோளின்படி ஸ்ரீராஜகட்க பரமேசுவரர் ஸ்ரீ சாலிவாடீசுவரியென்னும் அம்மையாரோடு எழுந்தருளப்பெற்று இனிது விளங்கும் ஸ்ரீ சமிவனக்ஷேத்திர மென்னும் கோவிலூருக்குக் கீழ்பால் வணிகர் குழாங்களாற் சிறப்புற்றோங்கும் காரைக்குடி என்றோர் நகருண்டு. அந்நகரில் வணிகர் குலத்திலே மெய்யப்பசெட்டியா ரென்பவர் ஒருவரிருந்தார். அவர் மனைவியார் பெயர் வள்ளி யம்மையார். அவர் வயிற்றில் அந்நாட்டாரும், பிறரும் முற் பிறப்புகளிற் செய்த பெருந் தவப்பயனாலும், ஸ்ரீஅகண்ட சச்சிதானந்த பரிபூரண சொரூப பரமேசுவரனது பூர்ண கிருபையினாலும் ஓர் செல்வத் திருக்குமாரர் அவதரித்தனர்.

அங்ஙனம் அவதரித்த குமாரர் முத்துராமலிங்கரெனப் பெயர் தரிக்கப்பெற்று, இளமைப் பருவத்திற்றானே சகல கலைகளையும் ஓதி யுணர்ந்து, விவேக வைராக்கியாதி சாதனங்களாற் சிறந்து விளங்கி, சிலகாலம் ஊருக்கு ஆக்கினேய திசையிலுள்ள திருவாசல் மடத்திற் றமது நண்பராகிய நல்லான்செட்டியாருடன் ஞானநூற் பயிற்சிசெய்து, பிரபஞ்சம் உண்மையென்னும் மயக்க மின்மையின் அதிற் சிறிதும் இலக்ஷியமின்றி, கேட்பவ ரதிசயிக்க மிகக் கெம்பீரமாய் வைராக்கியபரமான வார்த்தைகளை வசனித்துக்கொண்டு, தாம் குருவை யடைந்து குரு சம்பிரதாயத்தை விளக்கவேண்டுமென்னுங் கருத்தை யுட்கொண்டு, அது வாய்க்குந் தருவாயை எதிர்பார்த்தவராய், விபூதியை உத்தூளனஞ் செய்துகொண்டு அகநோக்குற்றுத் தமது உண்மைநிலையி லிருப்பார்.

